

*தருமபுர ஆதீனம் 25-வது மகாசந்நிதானம்*

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

உ

குருபாதம்

தருமபுர ஆதீனம்

# ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஜன்மநக்ஷத்திர மலர்

4—11—53.

வெளியீடு எண் 302.

உ

குருபாதம்

வேம்பை நாராயணன் இயற்றிய

# திரிசிராமலை அந்தாதி

(சிலையெழுத்தில் அமைந்தது)

இது

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
இருபத்தைந்தாவது மகாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

திருவுள்ளப்பாங்கின்வண்ணம்

வெளியிடப்பெற்றது.

திருவிதாங்கூர்ப் பல்கலைக்கழகத்து
முன்னைத் தமிழ்ப்பேராசிரியர், இராவ்சாஹிப்,

**ஸ்ரீ மு. இராகவையங்கார் அவர்கள்**

பரிசோதித்தெழுதிய பொழிப்பு-குறிப்புரைகளுடையது.

**தருமபுர ஆதீனம்**

**1953.**

# முகவுரை

நம் தமிழ்மக்கள் புதிதாக அறிந்து சுவைக்கத்தக்க விருந்தொன்று உண்டு. இதுவரை நம்மனோர் அதனை நன்றாக அறிந்தனுபவிக்கக் கூடவில்லை. இதற்குக்காரணம், மலைச்சாரலொன்றில் உள்ள குகையில், அது மறைந்து கிடப்பதேயாகும். இந்த விருந்து வயிற்றுக்கு ஈயப்படுவதன்று. சிந்தைக்கினிய செவிக்கினிய செஞ்சொற்களோடு பக்திநலம் கனியும் இலக்கியவிருந்தே இது.

தமிழ் மொழியின் பழைய இலக்கியச் செல்வங்களிலே 'விருந்து' என்ற வகையொன்று உண்டு. அது புதிய முறையில் முன்னோர் ஆக்கிவந்த நூலாகும். இத்தன்மையானவற்றைத் தொண்ணூற்றாறு என்று கணக்கிட்டு வைத்தனர் பின்னோர். இவற்றுள் ஒன்று அந்தாதி என்பது. வெண்பா கலித்துறைபோன்ற பாவகையில் அமைந்து, ஒரு கவியின் கடைசிச்சீரையோ அசையையோ அடுத்த கவியின் ஆதியாக வைத்து, பெரும்பாலும் நூறு செய்யுள்வரை பாடப்படுவது இப்பிரபந்தம். சங்ககாலத்தில் இம்மாதிரி நூல்கள் வழங்கியதாகத் தெரியவில்லையேனும், பிற்காலத்தே இப்பிரபந்தங்கள் பெரியோர்களாற் பாடப்பட்டுள்ளன. இவற்றுள் பழைமையானவை—பொய்கையார்,

காரைக்காலம்மையார் முதலியோர் செய்த வெண்பா வந்தாதிகளும், சேரமான் பெருமாள் முதலியோர் செய்த கலித்துறை யந்தாதிகளுமாகும். இவை யாவும் தெய்வ சம்பந்தம் பெற்றவை. இவைபோலப் பழைமையும் தமிழ் வளமும் கொண்ட விருந்துநூல் ஒன்று உள்ளதாயினும் அது பிரசித்தம் பெற்றதில்லை. அதுபற்றிக் கூறத்தக்கன சில உண்டு.

தமிழ் நாட்டுள்ள மலைப்பகுதிகளிலே குடைவரை என்ற குகைகள் வெட்டி, அவற்றுள் மண்டபங்களும் தெய்வ முதலிய உருவங்களும் வகுத்துச் சிற்பத்திறம் விளங்கும்படி முதன்முதல் செய்வித்த வேந்தர்கள் பல்லவரே ஆவர். இவர்களில் கி. பி. ஏழாம்நூற்றாண்டில் அதாவது இற்றைக்கு 1300 ஆண்டுகட்கு முன் ஆட்சிபுரிந்த மகேந்திர வர்மனும் அவன் மகன் நரசிம்ம வர்மனும் மாவலிபுரத்திலும் பிறதலங்களிலும் எடுப்பித்த குகைக் கோயில்கள் சில உள்ளன. அவற்றுள் திருச்சிராப்பள்ளிக் குன்றிற் காணப்படும் மண்டபங்கள் சிலவும் அவர் காலத்தில் அமைந்தவை. இக்குகை மண்டபமொன்று, தமிழ் எழுத்துக்கள் நிரம்பிய பெரிய சாஸனமாகும். இச்சாஸனம் அரசன் அல்லது தலைவனொருவனது அறச்செயல்களைக் குறிப்பதன்று. கட்டளைக் கலித்துறைகளும் இறுதி வெண்பாவுமாக 104 பாக்களால் ஆகிய ஓர் அந்தாதி நூலாம். இச்செய்யுட்சாஸனம் இற்றைக்கு 60 ஆண்டுகட்கு முன் கல்வெட்டிலாகாத் தலைவரால் பதிப்பிடப்பெற்றதே. ஆனால், இது தமிழறிஞர்களின் கவனத்தைக் கவர்ந்து, ஆராய்ந்து கொள்ளப்பட்டதாகத் தெரியவில்லை. இந்நூற்பாடல் பலவும் பிழைகள் மலிந்தும் சீர் தளை தொடைகள் சிதைந்தும் இடையிடையே எழுத்துக்கள் விடப்பட்டும்

உள்ளதனுல், அவ்வாறு கவனியாமல் நெகிழவிட்டனர் போலும். காரணம் எதுவாயினும், பழைமை பெருமைகள் உடையது இந்நூல் என்பதிலும், அறிஞர்கள் ஆராய்ந்து கொள்ளற்குரிய சிறப்புடையது என்பதிலும் ஐயமில்லை.

வெண்பா கலித்துறைகளில் அமையும் நூல்கள், சீர் தளைகளின் கட்டுக்கு உட்பட்டு ஓசைநயங்கொண்டு விளங்கவேண்டியவை. அத்தகைய அமைதிகளால் திகழ்வது இந்நூல். இந்நூலிறுதியிலுள்ள பாயிரப் பாடல்களால் இவ்வாசிரியரின் தந்தை மணியன் என்ற பெயருடையார் என்பதும், வேம்பை என்பது இவர் வாழ்விடமான ஊரென்பதும், நாராயணன் என்ற இயற்பெயருடையார் என்பதும், மதுரை மணலூர் சேய்ஞலூர் குண்டூர் என்ற நகர்களில் தலைமையும் உரிமைகளும் உடையவரென்பதும் தெரியவருகின்றன. "செங்குவளை நாறுமல் லாகத்து நாராயணன்" என்று நூலுள் தம்மை இவர் குறிப்பிடுகின்ருர். செங்குவளைமாலை வணிகர்க்கு உரியதாம். ஆகவே இவர் வைசியகுலத்தவராய், புகழ் பெற்றிருந்தமை பெறப்படும்.

இவர் வாழ்விடமான ஊர், வேம்பையே என்பது, அச் சொல்லால் இவர் அடிக்கடி விசேடிக்கப்படுதலால் தெரிகின்றது. வேம்பை - வேம்பத்தூர். சோழநாட்டிலும் பாண்டிநாட்டிலும் இப்பெயர்பெற்ற ஊர்கள் உண்டு. 'தென்வேம்பைய ரண்ணல்' எனப்படுதலால், இவரைப் பாண்டிநாட்டு வேம்பத்தூரினராகக் கொள்ளலாம். இந்நூலாசிரியர்க்கு ஆண்மக்கள் இருந்தனர் என்றும், அவர்கள் முயற்சியாலும் பெருநிதி படைத்துவந்தவர் என்றும்,

> "அடியேனுக்கிம்மைப் – பொருள்செய்துதவும்
> புதல்வரைத் தந்தேன் பொல்லாத சொல்லால்
> மருள்செய்த மாலைகொண்டானை."

என்று இவர் பாடுதலால் தெரியலாம்.

> "நாராயணன் நம் சிராமலைமேல்....
> வைத்த கலித்துறை"

> "நம் சிராமலைமேற் கற்பதித்தான்"

என்ற தொடர்களில் 'நம்' என்பதனால் இவ்விறுதிப் பாயிரத்தினைப் பாடியவர் பிறராகத் தோன்றுகிறார்.

இனி, இவ்வந்தாதி ஆசிரியரது காலம், 9–10 நூற்றாண்டு அதாவது இற்றைக்கு 1100 ஆண்டுகட்கு முன்னதாகவேண்டும். இது, இவர் வரைவித்துள்ள எழுத்தமைதி கொண்டு புலனாகின்றது. நூலின் உள்ளீடான பொருளமைதியை நோக்கினும் இக்காலம் பொருந்துவதேயாம். தென்னாட்டில் பல்லவராட்சி குலைந்து சோழராட்சி தொடங்கிய 9-ம் நூற்றாண்டிறுதி, இவர்க்குரிய காலமாகக் கருத இடமுண்டு.

இனி, நூலை நோக்குவோம். இவ்வந்தாதிக்குக் காப்புச் செய்யுள் இல்லை. பழைய பொன் வண்ணத்தந்தாதி போன்றனவும் இத்தன்மையானவையே. தெய்வசம்பந்தமே முழுதுமுடைய நூற்கு வேறொரு தெய்வத்தைக் காப்பாக நிறுத்த முன்னோர் கருதவில்லை போலும்.

இந்நூலின் முதற்பாட்டில் "உலகம் மடந்தை நுதல் உறந்தைப்பதி.........சிராமலை" என்று தொடங்குகிறது. இதிலிருந்து அறியப்படுவதொன்றுண்டு. அஃதாவது

சோழர் தலைநகரமான உறையூரின் ஒருபகுதியாகவே, சிராப்பள்ளிமலையும் அதனைச் சூழ்ந்த ஊரும் முன்பு இருந்தன என்பதாம்; இக்காலத்தோ திருச்சிராப்பள்ளியே தனிப்பெரு நகரமாகவும், அதன் உட்கிடையான ஒரு பகுதியே உறையூராகவும் மாறியுள்ளன. இந்நிலைமை 13-ம் நூற்றுண்டுக்குப் பின்பே நிகழ்ந்திருக்கவேண்டும். ஏனெனில், அக்காலத்தவரான சேனுவரையர் என்ற உரையாசிரியர் 'உறையூர்க்கு அயலதாகிய சிராப்பள்ளிக் குன்றை உறையூர்க்கட் குன்று என்பர்' என்று உதாரணம் காட்டுவதிலிருந்து தெரியலாம். திருச்சிராப்பள்ளிக்கு செவ்வந்திபுரம் என்பது புராணம் கூறும் ஒரு பெயர். இச் செவ்வந்திபுராணத்தில் உறையூரழிந்த வரலாறு, முனிவர் ஒருவரின் சாபங்காரணமாக நிகழ்ந்ததென்று கூறப்பட்டுள்ளது. இதனுல், சங்ககால முதல் விளங்கிய அச்சோழர் தலைநகரம் தன் நிலை குன்றியது 13, 14-ம் நூற்றுண்டுக்குப் பின்புபோலும் என்று கருதக்கூடியதே. ஆகவே, இவ்வந்தாதி முதற்பாடல் குறிப்பிட்டிருப்பது, உறையூரின் பழைய நிலைமையாகும்.

இவ்வாறு தென்னுட்டின் திலகம்போன்ற திருச்சிராப்பள்ளிக் குன்றையும் ஊரையும்பற்றி ஆசிரியர் கூறும் கற்பனைவருணனைகள் பல. அறங்களும் நீதிகளுமாக இவர் கூறும் விஷயங்கள் பல. பல பாடல்களால் இவரது பக்தியின் மேம்பாடும் நன்கு புலனுகிறது. சிவனடியார்களிற் கண்ணப்பரொருவரே இவராற் போற்றப்பட்டவர். தில்லை வாழந்தணர் பெருமையும், ஒற்றியூர் மருதூர் கற்குடி என்ற தலங்களும் சிறப்பிக்கப்பட்டுள்ளன. சிவபிரானருளால் களவியற்கு மெய்யுரையொன்று பாண்டியன் பெற்ற வரலாறும் உண்டு. வேறு தலமான்மியமொன்றும்

கூறப்படவில்லை. பிரபலமாய் வழங்குகின்ற ஈசன்தாயான செய்தி காணப்படாமை வியப்பாகவுளது.

இனி இந்நூலில், அறம்புரிந்தும் பொருளீட்டியும் இம்மைவாழ்வு அடைதற்குரிய தலம் திருச்சிராப்பள்ளி என்பதை இவ்வாசிரியர் பல்லிடங்களினும் கூறுவர். அவ்வாறே காதலிருவர் கருத்தொருமித்துத் துய்க்கும் காம புருஷார்த்தமும் அவ்விடத்தார்க்கு உரியதென்று உணர்த்துவார்போல, அகத்துறைச் செய்திகள் பல இவராற் பாடப்பட்டுள்ளன. இவ்வகத்துறைகட்கெல்லாம் பாரமார்த்திகமான உள்ளுறைப் பொருள்கள் கூறுதலும் உண்டு.

முற்காலத்தவர், தாம் புரியும் அறச்செயல்களைச் சிலாசாஸனம் செய்விக்க விரும்பினால், முதலில் அதனை அரசர் தலைவர்க்கு அறிவித்து, அவர்கள் குறிப்பிடும் இடத்தே அனுமதியுடன் வரைவிப்பது வழக்கம். பெரியதாகிய இச்செய்யுட் சாஸனமும் இவ்வாறு அனுமதிக்கப் பட்டதேயாகவேண்டும். அந்த முறையில் கிடைத்தற்கு அரிய இக்குகை மண்டபத்தைக் குறிப்பிட்டு அதனில் உட்பாகத்தில் தம் நூலையே இவ்வாசிரியர் பொறித்திருப்பதால், தம் காலத்தில் இவர்க்கிருந்த சிறும் செல்வாக்கும் புலனாகின்றன. இறுதிப் பாயிரச்செய்யுளில் 'கற்பந்தல் நீழலில் வைத்த கலித்துறை' என்ற தொடரில், அக்குகை மண்டபத்தைக் கற்பந்தல் என்று கூறியிருப்பது அருமையான சொல்வழக்காகும்.

இக்காலத்து நூல்கள் அச்சுப் பதிப்பைப் பெறுவது போல, முற்காலத்தே இந்நூல் கற்பதிப்பைப் பெறலாயிற்று. அச்சுப் பதிப்பில், பல பிரதிகளின் உதவியால்

ஒரு நூல் நாட்டில் பரவக்கூடுமேனும், அது சீர்குன்றமல் நிலைக்கக் கூடியதன்று. இக்கற்பதிப்போ, ஆயிரமாண்டு கட்கு மேலாகியும் இன்று வரைந்ததுபோலவே காணப்படு கின்றது. ஏன்? இச்சிராப்பள்ளிக் குன்றம் உள்ளவரை இது நின்று நிலவக்கூடியதே யன்றோ? இதனை மனதில் கொண்டு நோக்குவோமாறல் "நம் சிராமலைமேல் கற் பதித்தான் சொன்ன கவி" என்று சிறப்பிக்கப்பட்ட தொடரின் நயம் நன்கு விளங்குகின்றது.

இத்தகைமை யுடையதாயினும், இதனைப் பொறித்த கற்றச்சன் தமிழறிவு நன்கு படைத்தவன் என்று சொல் வதற்கில்லை. பொதுவாக மற்றைச் சாஸனங்களிற் காணப் படுங் குறைகளும் தவறுகளும் இதன் கற்பதிப்பினும் மலிந் துள்ளன. ஆயினும் எழுத்தொப்புமை, சீர் தளை மோனை எதுகை முதலியவற்றைக்கொண்டு இவற்றிற் பலவும் திருத்தம்பெறக் கூடியனவே. அதனால் ஏட்டுச் சுவடிகளை ஆராய்வதுபோல இதனை நன்கு ஆராய்ந்தே வெளியிட வேண்டும்.

இத்தகைய அரியநூலை நன்கு சோதித்து வெளியிட வேண்டுமென்ற அவா கற்றோர் பலருக்கும் உண்டு. அம் முறையில் இதனை ஆராய்ந்து பதிப்பிட வேண்டுமென்ற நோக்கத்துடன் இதன் பாடல்களைச் செப்பனிட்டு நானும் பிரதிசெய்து வைத்திருந்தேன். இதனையறிந்த அன்பர் சிலர் என் பிரதியினைப் பெற்று, நன்கு எவ்விதத்திலும் வெளியிடச்செய்வது நலமென்று அறிவித்தனர்,

இந்நிலையில்: தருமபுர ஆதீனம் 25-வது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் தங்கள் ஆதீனப் பதிப்பாக இதனை

வெளியிட விரும்பினார்கள். அவர்களது 'திருவுள்ளப்படி இந்நூலுக்குப் பொழிப்புரை, குறிப்புரைகள் இட்டு பதிப்பை நன்கு பரிசோதித்து, மகா சந்நிதானத்தின் ஜென்ம நட்சத்திர தினத்தில் நாண்மங்கல வெளியீடாக இப்போது வெளியிடலாயிற்று. எத்தனையோ அரிய பெரிய நூல்களை ஆதீனம் மூலம் வெளியிட்டும், செந்தமிழ் மாண வர்கள் பலர் தங்கள் கல்லூரியில் பயின்று புலமைப்பேறு அடையும்படி செய்து உதவியும் தமிழ் வளர்ச்சி புரிந்து வரும் மகா சந்நிதானத்திற்கு இச்சிறுவெளியீடு எளிய தாயினும் எம்போலியர்க்கு இவ்வெளியீடு அருமையும் மகிழ்ச்சியும் அளிப்பது என்பதனைச் சொல்லவும் வேண்டு மோ. அவர்கள் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து இத்தகைய நூல்களையும் அவற்றைக் கற்கும் மாணவர்களையும் தமிழகத்திற்கு அளித்து, தமிழ் வளர்ச்சி புரிந்துவரும்படி எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

இராமநாதபுரம்,
1—11—53.

இங்ஙனம்,
மு. இராகவையங்கார்.

உ

சிவமயம்

# திருச்சிராப்பள்ளித் திருப்பதிகங்கள்

பண் – குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளே
றொன்றுடையானை உமையொருபாகம் உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென்னுள்ளம் குளிருமே. 1

கைம்மகவேந்திக் கடுவனொடூடிக் கழைபாய்வான்
செம்முகமந்தி கருவரையேறுஞ் சிராப்பள்ளி
வெம்முகவேழத் தீருரிபோர்த்த விகிர்தாநீ
பைம்முகநாகம் மதியுடன்வைத்தல் பழியன்றே. 2

மந்தம்முழவம் மழலைததும்ப வரைநீழல்
செந்தண்புனமுஞ் சுனையுஞ்சூழ்ந்த சிராப்பள்ளிச்
சந்தம்மலர்கள் சடைமேலுடையார் விடையூரும்
எந்தம்மடிகள் அடியார்க்கல்லல் இல்லையே. 3

துறைமல்குசாரற் சுனைமல்குநீலத் திடைவைகிச்
சிறைமல்குவண்டும் தும்பியும்பாடுஞ் சிராப்பள்ளிக்
கறைமல்குகண்டன் கனலெரியாடுங் கடவுளெம்
பிறைமல்குசென்னி உடையவனெங்கள் பெருமானே. 4

கொலைவரையாத கொள்கையர்தங்கள் மதில்மூன்றும்
சிலைவரையாகச் செற்றனரேனுஞ் சிராப்பள்ளித்
தலைவரைநாளுந் தலைவரல்லாமை யுரைப்பீர்காள்
நிலவரைநீல முண்டதும்வெள்ளை நிறமாமே. 5

வெய்யதண்சாரல் விரிநிறவேங்கைத் தண்போது
செய்யபொன்சேருஞ் சிராப்பள்ளிமேய செல்வனார்
தையலொர்பாக மகிழ்வர்நஞ்சுண்பர் தலையோட்டில்
ஐயமுங்கொள்வர் ஆரிவர்செய்கை அறிவாரே. 6

வேயுயர்சாரற் கருவிரலூகம் விளையாடும்
சேயுயர்கோயிற் சிராப்பள்ளிமேய செல்வனார்
பேயுயர்கொள்ளி கைவிளக்காகப் பெருமானார்
தீயுகந்தாடல் திருக்குறிப்பாயிற் றாகாதே. 7

மலைமல்குதோளன் வலிகெடவூன்றி மலரோன்றன்
தலைகலனாகப் பலிதிரிந்துண்பர் பழியோரார்
சொலவலவேதஞ் சொலவலகீதஞ் சொல்லுங்கால்
சிலவலபோலுஞ் சிராப்பள்ளிச்சேடர் செய்கையே. 8

அரப்பள்ளியானும் மலருறைவானும் அறியாமைக்
கரப்புள்ளிநாடிக் கண்டிலரேனுங் கல்சூழ்ந்த
சிரப்பள்ளிமேய வார்சடைச்செல்வர் மனைதோறும்
இரப்புள்ளீரும்மை யேதிலர் கண்டால் இகழாரே. 9

நாணாதுடைநீத் தோர்களுங்கஞ்சி நாட்காலை
ஊணாப்பகலுண் டோதுவோர்கள் உரைக்குஞ்சொல்
பேணாதுறுசீர் பெறுதுமென்பீரெம் பெருமானார்
சேணார்கோயில் சிராப்பள்ளிசென்று சேர்மினே. 10

தேனயம்பாடுஞ் சிராப்பள்ளியானைத் திரைசூழ்ந்த
கானல்சங்கேறுங் கழுமலவூரிற் கவுணியன்
ஞானசம்பந்த நலமிகுபாடல் இவைவல்லார்
வானசம்பந்தத் தவரொடுமன்னி வாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்.

—திருஞானசம்பந்த சுவாமிகள்

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறும் இறைவனார்
கட்டு நீத்தவர்க் கின்னருள் செய்யும்
சிட்டர் போலுஞ் சிராப்பள்ளிச் செல்வரே. 1

அரிய யன்தலை வெட்டிவட் டாடினார்
அரிய யன்தொழு தேத்தும் அரும்பொருள்
பெரிய வன்சிராப் பள்ளியைப் பேணுவார்
அரிய யன்தொழ அங்கிருப் பார்களே. 2

அரிச்சி ராப்பகல் ஐவரால் ஆட்டுண்டு
சுரிச்சி ராதுநெஞ் சேயொன்று சொல்லக்கேள்
திருச்சி ராப்பள்ளி யென்றலுந் தீவினை
நரிச்சி ராது நடக்கும் நடக்குமே. 3

தாயு மாயெனக் கேதலை கண்ணுமாய்ப்
பேய னேனையும் ஆண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாயனா ரென நம்வினை நாசமே. 4-10

திருச்சிற்றம்பலம்.

—திருநாவுக்கரசு சுவாமிகள்

உ

குருபாதம்

# திரிசிராமலை அந்தாதி

## நூல்

**உலகம் மடந்தை நுதல்உறந் தைப்பதி அந்நுதற்குத்**
**திலகம் பரம னமருஞ் சிராமலை அம்மலைவாய்**
**அலகில் கதிர்மணி பாய்புனன் மேல்வந் தணைந்திகலி**
**விலகுமப் பொன்னி புறங்கழுத் திற்கொண்ட வெள்வடமே. 1**

(ஸ்வ உலக[ம்] மடந்தை நுதலுறந்தைப்[ப]தி யந்நுதற்குத் திலதம் [ப]ரமனமருஞ்சிராமலை யம்மலைவா யலகி[ன்] னிறைந்த கதிர்மணிபாய . . ன் மெல்வந்ததநஜி . . ப் பொன்னி பரன் கழுத்திற் கொண்ட வெள்வடமே.)

**பொழிப்புரை :-** *உலகமாகிய பெண்ணுக்கு உறையூர் என்ற நகரம் நெற்றியாகவும், அந்த நெற்றியில் அணியும் திலகம் ஈசன் கோயில்கொண்ட சிராமலையாகவும், கணக்கற்ற ஒளிமணிகளைக்கொண்டு பரவிச் செல்லும் நீர் அம்மலையையணைந்து மேல்வந்து தாக்கி விலகிமீளும் காவிரியானது கழுத்தின்புறமாக அணிந்த வெண்மணிகளாலான வடமாகவும் உள்ளனஎன்றவாறு.*

**குறிப்புரை :-** *உலகமாகிய மடந்தையின் நுதல் உறந்தையாகவும், அந்த நுதலின் திலகம் சிராமலையாகவும்*

கூறப்பட்டன. இதனால் சிராப்பள்ளிமலை, உறையூரின் ஒரு பகுதியாகப் பண்டு அமைந்திருந்தநிலை புலனாகும். 'உறையூர்க்கு அயல்நின்ற சிராப்பள்ளிக்குன்றை உறையூர்க்கட் குன்று' என்ற உலக வழக்கும் உண்டென்பர் சேனாவரையர் (தொல்-சொல். 82). உலகமென்றது ஈண்டுத் தமிழுலகத்தை. மூன்றாமடியுள் 'அலகின்நிறைந்த' என்ற தொடரில் 'நிறைந்த' என்றசொல்லைக் கொள்ளுமிடத்து, வெண்டளை சிதைந்தும், கலித்துறையடி நீண்டும் பாடல் கெடும்; மேலும் அச்சொல் முன்னுள்ள 'அலகில்' என்பதன் கருத்தையே கூறுவதாகும்; அதனால் அது விலக்கற்பாலது. 'பாய......ன்' என்பது 'பாய்புனன்' என்பதன் சிதைவேயாம். 'மெல்வந்த நந்தி......ப் பொன்னி' என்ற தொடர் 'மேல்வந்தணைந்திகலி விலகுமப்பொன்னி' என்று எதுகை மோனைகட்கு இயைய அமையத்தக்கது. 'பரன் கழுத்தில்' என்பது 'புறங்கழுத்தில்' என்றிருத்தலே பொருத்தமாம்; இப்பாட்டில்வரும் மற்றை உருவகங்களுள் பரன் (சிவபிரான்) விடயமானவை வேறின்மை காண்க.*

**வடகயி லாயமுந் தென்பான் மலயப் பொருப்புமென்னுந்**
**தடவரை தாமிதன் றன்மைய வாவது தாமுணர்ந்துங்**
**கடவரை மேக முழக்குஞ் சிராமலை கண்டகண**
**முடவரை ஒக்கு மிதுகாணென் றெண்ணை மொழிகின்றதே. 2**

(வடகயிலாயமுந் தென்மான்மலையப் பொருப்பு மென்னுந் தடவரை தாமிதன் றன்மையவாவது தாமுணர்ந்துங் கடவரை மெகமுழக்குஞ் சிராமலை கண்ட[கண்மு]டவரை-யொ[க்கு மறுசான்]றெண்ணி மொழிகின்றதெ.)

* மூலக் கல்வெட்டுத் திருத்தப்படவேண்டிய முறைகள், இந்தப் பாடலில் மட்டும் விபரமாகக் குறிக்கப்பெற்றுள்ளன. பின்வரும் பாடல்களில் உய்த்துணர்ந்துகொள்க.

**பொ-ரை:-** வடக்கிலுள்ள கயிலாசகிரி, தென்பாலுள்ள பொதியமலை என்ற பெரிய மலைகள் இரண்டும், இச்சிராப்பள்ளி மலையின் தன்மையுடையன ஆவதை அறிந்திருந்தும், மதகளிறுகள் மேகம்போல முழக்கஞ் செய்யும் இம்மலையினைக் கண்ட கண்களுள்ள மக்கள், (மேற்கூறிய) கயிலாயம் பொதியம் என்ற ஊனமுள்ள அம்மலைகளை இம்மலை ஒத்துள்ளது காணும் என்று கூறுவது என்னே! எ - று.

கு-ரை:- கயிலாயமும் மலயமும் சிராமலை போல இருப்பவும், அம்மலைகள்போற் சிராமலை உள்ளது என்று பிறர் மாறிக்கூறுவது என்னே என்றபடி. இது விபரீத உவமைவகை. முட வரை - குறை பெற்ற மலைகள். கயிலைக்கு இராவணன் தூக்கியதாலும், மலயத்துக்கு இசைக்கு உருகியதாலும் அக்குறைகள் அமைந்தன என்க. 'கண் மொழிகின்றது' என இயையும். கண் என்றது அவ்வுறுப்புடைய மக்களை.

**மொழிந்திடுமெய்ம்மை முனிந்திடும்பொய்ம்மைமுயன்றிடுமின்**
**கழிந்திடும் யாக்கையைக் கைப்பணி கோடல் கருமுகில்வான்**
**பொழிந்திடு மெல்லரு விச்சிராப் பள்ளி புகுந்திடுமின்**
**இழிந்திடும் நும்வினை ஈசனங் கேவந் தெதிர்ப்படுமே. 3**

(மொழிந்திடு மெய்ம்மை முனிந்திடும் பொய்ம்மை முயன்றிடுமி[ன்] கழிந்திடும் யாக்கையைக் கைப்பணி கொடல் கரு முகில்வான் பொழிந்திடு மெல்லருவிச் சிராமலை புகுந்திடுமினிழிந்திடு நும் வினையிசனங்கே வந்தெதிர்ப்படுமெ.)

**பொ-ரை:-** சத்தியத்தையே பேசுங்கள்; பொய் பேசுதலை வெறுத்தொழியுங்கள்; அழியக்கூடிய சரீர

உறுப்பால் தொண்டுபுரிய முயலுங்கள்; கார்மேகங்கள் வானிடத்தினின்று பொழியும் நீரருவிகளை உடைய சிராப்பள்ளியுட் புகுந்திடுங்கள்; (இங்ஙனம் உள்ளமும் உடலும் தூயராய்ப் புகுவீராயின்) ஆங்குக் கோயில் கொண்ட சிவபிரான் அவ்விடம் உங்கள் முன்பு எதிர் வந்து (உமக்கு வேண்டியதை) அருள்புரிவன் எ - று.

கு-ரை:- கைப்பணி - அலகிடல், மாலை தொடுத்தல் முதலிய திருத்தொண்டுகள். கைப்பணி கோடலை முயன் றிடுமின் என முடிக்க. சிராமலை என்பது தளைக்கு ஏற்காமையால், சிராப்பள்ளி என்று திருத்தப்பெற்றது. இப்பெயர் இந்நூலுட் பெரிதும் பயில்வது.

**படும்பொழு தாயிற்று வெங்கதிர் கூற்றுவன் பற்றிநம்மை**
**அடும்பொழு தாலஞ்ச லென்பான் சிராமலை யாரெரிவந்**
**திடும்பொழு தாயிற் றெதிர்கண் டிடிலெம ருங்கொடியர்**
**நெடும்பொழு தாலென் கொலோவன்பர் நீர்வந்து**
**நிற்கின்றதே. 4**

(படும்பொழுதாயிற்று வெங்கதிர் கூற்று[வன்] பற்றிநம்மை யடும்பொழுதா வஞ்ச[லெ]லன்பான் [சி]ர[ா]மலையர் எரி வந்திடும் பொழுதாயிற் றெதிர்கண்டிடிலெமருங் கொடியர் நெடும் பொழுதா லென்கலொ வந்பர் நிர்வந்து நிற் கின்றதெ )

*இது புனத்திடை வந்துநின்ற தலைமகனைத் தோழி வரவு விலக்கல்.*

**பொ-ரை:-** *வெப்பந்தங்கிய சூரியன் அத்தமிக்கும் பொழுது வந்தது; கூற்றுவன் நம்மைப் பற்றிக்*

கொண்டு வருத்துங்காலத்தே, அஞ்சாதே என்று அபய மளிக்கும் ஈசனது சிராமலைக்கண் மூட்டப்படும் காட்டுப் பெருந்தீ பரவிவரும் அமயமும் வந்தது ; இவையன்றி அந்நியரான உம்மை எதிரேகாண நேர்ந்தால், எம்மவ ரான மலைவாணர் கொடுமை இழைப்பவராவர். அன்பரே ! நீண்டநேரமாக நீர் இங்கு வந்து தங்கி நிற்பது என்னே எ-று.

கு-ரை:- அன்பர், அண்மை விளி. பொழுதால் - பொழுதில். ஆர் எரி - பரவும் காட்டுத்தீ.

**நிற்கும் துயர்கொண் டிருக்கும் பொழுதின்றி நெஞ்சனுங்கித்**
**தெற்கும் வடக்கும் திரிந்தே வருந்திச் சிராமலைமேற்**
**பொற்குன் றனைக்கண்டு கொண்டே னினிப்புறம் போகவொட்**
**கற்குன் றனையநெஞ் சிற்செல்வ ராவில்லை காரியமே. [டேன்**

(நிற்குந் துயர்கொண்டிருக்கும் பொழுதின்றி நெஞ்சனுங்கித்
தெற்கும் வடக்குந் திரிந்தெ வருந்திச் சிராமலைமெற்
பொற்குன்றனைக் கண்டு கொண்டெ னினிப்புறம் பொக
வொட்டென் கற்குன்றனைய நெஞ்சிற் செல்வரா வில்லை
காரியமெ.)

**பொ-ரை:-** எப்பொழுதும் நிலைத்துள்ள துயரத்தை மேற்கொண்டும், மனவமைதி பெற்றிருக்கும் பொழுதில் லாமலும், கிலேசமடைந்து தெற்கிலும் வடக்கிலுமாகத் திரிந்து வருத்தமுற்றுவந்த நான், (இடையில்) பொற் குன்றமான சிராமலைப் பெருமானைத் தரிசித்துக் கொள்ள லானேன்; இனி என் மனத்தை வேற்றிடம் செல்லவிட மாட்டேன்; கல்மலைபோலும் நெஞ்சமுள்ள செல்வர் களிடம் செல்லவேண்டிய காரியமும் எனக்கு இனி இல்லை எ-று.

கு-ரை:- இந்நூலாசிரியர் திருச்சிராப்பள்ளிக்குத் தென் றிசையினும், வடபாலினும் வாணிபமும் நிலபுலங்களும் மிகுதியும் உடையவராயிருந்தவர் என்பது இந்நூலிறுதியில் வரும் பாயிரவெண்பாவால் தெரியவருதலின், தாம் பொரு ளீட்டி வருந்தியதற்கு அவ்விரு திசைகளையுமே கூறினர் போலும். அவ் விருபிரதேசங்களுக்கு மிடையில், சிராப் பள்ளியாகிய பொற்குன்றமுடையானே தமக்குக் கிடைத்து விட்டமையால் வேறு செல்வர்களால் இனித் தாம் அடைய வேண்டிய காரியம் இல்லை என்பது குறிப்பு. திருச்சிராப் பள்ளிமலையைப் *பொன்மலை, பொற்குன்று, கனகக்குன்று என்றும், அம்மலைச் சிவபிரானைப் பொன்மலையான், பொற் குன்றன் என்றும் தம்நூலுட் பல்லிடத்தும் இந்நூலார் வழங்குவர்.

**காரிக் குதிரைக் கடவுட் கிறைச்சியும் கள்ளுநல்கும்**
**ஓரிக் குரற்பெண்க ளொன்றறி யீரொரு பாற்குறவர்**
**சேரிக் கொடுமுடித் தெய்வச் சிராமலைத் தெண்மணிநீர்**
**வாரிக் குளிக்க வொளிக்குமெய்ந் நோயிம் மடவரற்கே. 6**

(காரி[க்குதவா]ர் கடவுட் கிறைச்சியுங் கள்ளு நல்கு மொரிக் குரற் பெண்க ளொன்றறியீ ரொருபால் குறவர் செரிக் கொடுமுடித் தெய்வச் சிராமலைத் தெண்மணிநிர் வாரிக் குளிக்கவொளிக்கு மெய்[ந்நொ] யிமடவரற்கெ.)

இது வெறிவிலக்கு என்னும் துறை.

**பொ-ரை:-** காரி என்ற குதிரையை ஊர்தியாக உடைய சாத்தனார்க்கு(நேர்ந்துகொண்டு)இறைச்சியையும்

* பொன்மலை என்பது திருச்சிராப்பள்ளியை அடுத்துள்ள வேறு சிறுகுன்று ஒன்றற்கு இப்போது வழங்குகிறது.

கள்ளையும் பலியாகக் கொடுக்கும் கிழகரிபோலும் குர லுள்ள பெண்டிர்காள்! சிறந்த மருந்தொன்றை நீவிர் அறியாதவரானீர்; ஒருபக்கம் மலைவாணரான குறவர் சேரியையும் கொடுமுடியையுங்கொண்ட சிராமலையி லுள்ள தெளிந்த மணிபோன்ற தீர்த்தத்தை மொண்டு கொண்டு வந்து இவளைக் குளிப்பித்தால், இவளுக்கு உற்ற மெய்நோய் ஓடி ஒளிந்துவிடும் எ-று.

கு-ரை:- காரி என்பதனை அடுத்துக் குதிரை என் றிருந்த எழுத்துக்கள் பெரிதும் மாறின. காரிக் குதிரை - ஐயனாரது கறுப்புக்குதிரை; 'காரி, குதிரை; கோழி, கொடியே' என்பது பிங்கலந்தை. முருகக்கடவுட்குப் போலவே, ஐயனாரான சாத்தற்கும், நோய்முதலிய துன்பம் நீங்கவேண்டி உயிர்ப் பலியிட்டும் கள்ளும் இறைச்சியும் தூவியும் நேர்ந்துகொள்ளுதல் பண்டைவழக்கு. 'செங் குஞ்சித், தாரார் நறுமாலைச் சாத்தற்குத் தான்பின்னும், நேரா தனவொன்று நேர்ந்தாள் அதனாலும், தீராதென் சிந்தைநோய்' என்றார் திருமங்கை மன்னனும். (சிறிய திருமடல் 6-17.)

**மடக்கோல் வளையிடத் தான்றன் சிராமலை வாழ்த்தலர்போற்**
**படக்கோ னிலமன்னர் பாவையைப் பேசிப் பரிசமிட்டார்**
**விடக்கோ கிடந்தன்ன வேலர் வரையார்கொள் வானணைந்தார்**
**துடக்கோ வெளிப்படுத் தீர்மற வீர்நுங்கள் சுற்றத்தையே. 7**

(மடக்கொலவளையிடத்தான் றன் சிராமலை வாழ்த்திலர்பொல் படக்கொநிலமன்னர் பாவையைப் பெசிப் பரிசமிட்டார் விடக்கொ கிடந்த[ன] வெளர் [வரையார்] கொள்வா ளணைந்தார் தடக்கொ வெளிப்படுத்தார் மறவீர்நுங்கள் சுற்றத்தையெ.)

இது எதிர்ப்பட்ட தலைவனைத் தோழி, ஏதிலர் வரையவருதல்கூறி வரைவு கடாயது.

**பொ-ரை:-** மடப்பம் பொருந்திய உமாதேவியை இடப்பக்கம்கொண்ட ஈசனது சிராமலையைத் துதியாதவர் போல, பெருங்கொடியும் செங்கோலும் உடைய பூவேந்தர்கள், இப்பாவைபோல்வாளைத் திருமணம் நிச்சயித்து, இவளைப் பெறுதற்கு வேண்டிய பரிசப் பொருளைக் கொணர்ந்து, சுற்றத்தார்க்கு அளித்தனர்; ஆதிசேடனே கிடந்ததுபோன்ற வேற்படை உடைய வீரர் சிலர், இவளை வரைதலின்றியே வலிதிற் கவர்ந்து கொள்ளும் பொருட்டு இவ்வூரை அணைவாராயினர்; (அங்ஙனமாயினும்) உங்களிருவர்க்கும் உள்ள காதற் பிணிப்பை இவள் சுற்றத்தார்க்கு இன்னும் நீவிர் அறிவித்தபாடில்லை; நும் சுற்றத்தொடர்பினை மறவாது விரைந்து காப்பீராக எ-று.

கு-ரை:- கோல் வளை - உமாதேவி; படம் - பெருங் கொடி (பிங்). விடக்கோ - அரவரசன்; அவனே கிடந்தது போலும் வேல். 'விடக்கோல்' என்று பாடமோதி விட வுருவான கழி என்றுமாம். வரைதற்கு வேண்டிய பரிச மிட்டு மகட்கொள்ள வந்தாரும், அஃது இன்றி வலிதிற் கொள்ள வந்தாருமாகிய வேற்றரசர் முயற்சிகூறி, அவ் விருவரும் தத்தம் நோக்கம் கைகூடாதவராயினர் என்ப தனைச் 'சிராமலை வாழ்த்தலர்போல்' என்பதனாற் குறிப்பிற் பெறவைத்தனள் தோழி என்க; தலைவனை விரைய வரையுமாறு வேண்டியபடி. துடக்கு - நும்மிருவர்க்கும் உள்ள காதற்றொடர்பு. நுங்கள் சுற்றம் என்றது தன்னையும் உட்கொண்டு.

**சுற்றத்தை நீத்துநின் சூள்புணை யாகச் சுரம்படர்ந்த**
**நற்றத்தை போலிக்கு நல்குகண் டாய்பண்டு நாடறியப்**
**பெற்றத்தை யேறும் பெருமான் சிராமலை மேவலர்சேர்**
**குற்றத்தை நீக்கும் குணத்துர வோர்தங்கள் கோளரியே. 8**

(சுற்றத்தை நியத்திநின்ற சூள் புணையா(க)ச் சுரம்படர்ந்த
நற்றத்தை பொலிக்கு நல்கு கண்டாய் பண்டு நாடறியப்
பெற்றத்தை யெறும் பெருமான் சிராமலைமெலொ[ர்]செர்
குற்றத்தை நிங்குங் குணத்துரவொ[ர்] தங்கள் கொளரி
யெய்.)

*இது ஓம்படை கூறல்: அஃதாவது உடன்போக்கிற்கு உடம்பட்ட தலைவியைத் தோழி தலைவன்முன் அழைத்து வந்து அவனிடம் அவளை அடைக்கலப் படுத்தல்.*

**பொ-ரை:-** *பழங்காலமுதலே நாடு அறியும்படி இடபத்தை ஏறிச்செலுத்தும் பெருமானது சிராமலையை மேவாதவரைப் பொருந்தும் குற்றங்கள் நீங்கிய உத்தம குணத்தையும் ஞானத்தையும் உடையவர்களிற் சிங்க ஏறு போன்றவரே! தன்சுற்றத்தாரை விட்டு விலகி நீர் இட்ட சபதத்தையே தன் துயர்நீந்தும் தெப்பமாகக் கொண்டு, பாலைநிலத்தே உடன்போக்கிற் கொருப்பட்ட நல்ல கிளி போலும் என் தோழிக்குத் தலையளி செய்வீராக எ-று.*

கு-ரை:- *சூள் - நின்னிற் பிரியேன், பிரியின் தரியேன் என்றிட்ட ஆணை. தத்தை போலி - கிளிபோன்றவள்.*

**கோளரி யேறது போற்கொலை யானையைக் கொன்றுநுங்கள்
வாளரி யேறுகண் ணுளுயிர் தந்தவன் மால்கடல்வாய்
ஆளரி யேறிடத் தாண்டான் சிராமலை ஐவனமார்
தாளரி யேறுதஞ் சம்மற் றிதற்குத் தலைமகனே. 9**

(கொளரியெறு பொலக் கொலயானையைக் கொன்று [நி]ங்கள் வாளரியெறுகண் ணு[யிரு] தந்தவன்மால் கடல்வா யாளரி யொறிடத்தாண்டான் சிராமலை ஐவனமாந் தொளரி யெறு [தஞ்சம]ரிதற்குந் தலைமகளெ.)

*இது களிறுதரு புணர்ச்சிவகையால் தோழி செவி லிக்கு அறத்தொடு நின்றது.*

பொ-ரை:- *சிராமலைத் தினைப்புனத்தில், தக்க சமயத்தில் வந்து உங்கள் மகளைத் தாக்கவந்த கொலை யானையைச் சிங்க வேறுபோலப் பாய்ந்து கொன்று, ஒளியும் செவ்வரியும் கொண்ட கண்ணுடையவளான அவளுயிரைக்காத்து அளித்த தாளாண்மையுள்ள ஆண் சிங்கமான தலைமகனே, இந்நிகழ்ச்சியில் அவளுக்குப் புகலிடமானவன் எ-று.*

கு-ரை:- *''மால்கடல்......ஆண்டான்'' இப்பகுதியில் கூறும் வரலாறு தெரியவில்லை. ஈற்றுச்சீர் தலைமகளே என்றுள்ளது. இதுவே பாடமாயின், செவிலியைத் தோழி விளித்ததாகக் கொள்க.*

**தலைமுக மாறுகொள் தம்பியொருவன் தமையன் கொம்பார்
கொலைமுக யானைத் தலையன் இவர்தாய் குலமலையாள்
முலைமுக நீயு மயங்கி முயங்கிற்றுன் முன்மைஎன்னே
சிலைமுக நீடு திருமலை மேய திகம்பரனே. 10**

(தலைமக .... .... பரனெருவன் னவன்றம்பி கொம்பார் குலைமுகயா[னை]த்தலையின்னவர் தாயலை மலையாள் முலை முகு நியமயங்கி மயங்கிற்று[ன் முன்]மையென்னெ சிலை முகநிடு திருமலை மெய திகம்பரனே.)

பொ-ரை:- பெரும்பாறை மேலிடமாக நீண்டுள்ள திருமலையில் அமர்ந்துள்ள ஈசனே! தலையில் ஆறு முகங் களைக்கொண்ட தம்பி ஒருவன்; அவன் தமையன் கொலைபுரியவல்ல முகத்தில் ஒற்றைக் கொம்பினைக் கொண்ட யானைத் தலையனுவன்; இவ்விருவர்க்குந் தாயானவள் உயர்ந்த மலைப்பெண்ணுவள்; அவளது தனமுகப்பில் மயக்கமுற்று முயங்கியவன், திகம் பரனை நீ; இத்தன்மையுள்ள உன் தலைமையை நாங்கள் என்னென்பது எ-று.

கு-ரை:- உலக இயல்பின் வேருகத் திகம்பரனுயிருப் பவன் நீ யாதலால், உன்மக்களும் மனைவியும் உனக்கேற்ற படி இவ்வாறு அமையலாயினர்போலும் என, நிந்தாஸ் துதியாகக் கூறியவாறு. முன்மை - முதன்மை; தலைமை.

**பரந்தெரி கானிழன் மன்றுக ளாக பகையுரனைச்**
**சரந்தெரி கானவர் தண்மைய ராக தடமலரோன்**
**சிரந்தெரி யாவலி சேதித்த வீரன் சிராமலைபோல்**
**உரந்தெரி காளை ஒருவ னுடன்போன ஒள்வளைக்கே. 11**

(பரந்தெரி .... .... ன்றுகளாகிப் பகையுறனைச் சரந்தெரி கானவர்தன் னய .... க தடமலரொன் சிரந்தொயா வொள்வ[லி]சதித்த விரன் சிராமலைபொலுந் .... .... வானுடன் பொன வெள்வளைக்கெ.)

*இது, சுரத்திடைத் தலைவனுடன் போகிய மகட்குச் செவிலி இரங்கிக் கூறியது.*

**பொ-ரை;-** *பிரமனது சிரங்களை எண்ணி அதனால் அவன் பெற்றிருந்த வலிசிதைய அத்தலையிலொன்றைச் சேதித்த வீரனான ஈசனது சிராமலைபோலும் மார்பினைக் கொண்ட காளை ஒருவனுடன் போகிய என்மகட்கு, தீப்பரவி எரியும் பாலைவனம் நிழல்தரும் மன்றுகள் உடையதாகுக; பகைவர் மார்பினை அம்பிட்டு எரிப்பவராய அங்நிலத்து வாழும் கானவர் தண்மையர் ஆகுக எ-று.*

கு-ரை:- *'தங்நயமாக' என்றும் படித்துக்கொள்ளலாகும். நயம் - தண்ணளி; சிரம் தெரியா - சிரங்கள் தனக்கு இருத்தல்போல் ஐந்து இருப்பதை அறிந்து. மூலக் கல்வெட்டில் விடப்பட்ட எழுத்துக்கட்குப் பிரதியாக எழுத்துக்களும் சீர்களும் ஏற்றபெற்றி கொள்ளப்பட்டமை உய்த்துணர்ந்துகொள்க.*

**வளைவா யுடனுய்ய வந்தது காண்மண நாளிற்பந்தர்**
**முளைவாய் எயிற்று முதல்வர் சிராமலை முட்பலவின்**
**சுளைவாய் சொரிந்த பெருந்தேன் சுடர்தோய் நறுங்கமலத்**
**தளைவாயத் தேனருந் தச்சுரும் பார்க்கின்ற தண்பரணே. 12**

(வளைவர .... .... யவந்துகாண மணிநாளில் வந்தமுளைவா யெயிற்று முதவச் சிராமலை முடியிலவிள் சுளைவாய் சொரிந்த பெருந்தென் சுடர்தொய் நறுங்கமலத் தளைவாய்த் தெனருந்தச்சுரும்பார்க்கின்ற தண் பரணியெ.)

*இது மணவணி கண்டு மகிழ்தல்.*

**பொ-ரை:-** *பன்றிக் கொம்பணியும் ஈசனது சிராமலையில், முள்ளார்ந்த பலாப்பழத்தின் சுளை வாயினின்று சொரிந்த தேனையும், சூரியவொளி சேர்தலால்*

விரிந்த தாமரை மொட்டினின்று ஒழுகும் தேனையும் அருந்துதற்காக வண்டினம் சூழ்ந்தொலிக்கும் தன்மையுடைய தினைப்புனத்துப் பரணே, வளைவுள்ள வாசலுடன் நரமெல்லாம் உய்யும்படி இத்திருமணநாளில் கல்யாணப் பந்தராக வந்ததுகாண் எ-று.

கு-ரை:- முன்பு தினைப்புனங்காவற்கு அமைந்து தலைவனைச் சந்திக்கநேர்ந்த இடமான பரணே, இப்போது திருமணப் பந்தராக வந்து காட்சியளிக்கின்றது என்று ஆயத்தார் மகிழ்ந்து கூறியவாறு. முளை வாய் எயிறு-வாயிடம் முளைத்த கொம்பு; அன்மொழித்தொகையாகப் பன்றிக்கு ஆயிற்று. 'கேழல் முடக்கோடு முன்னம் அணிவாற்கு' என்றார் பின்னோரும். பலவின் சுளைத்தேனையும், கமலத்தேனையும் என உம்மை விரிக்க.

**பரணித் தொடையல் பெறுங்குரும் பைக்கிணை பல்லுமுத்தம்**
**காரணத் தடங்கண் மலர்கா தளவுமுன் காரதிரும்**
**திரணைத் தடம்பெருஞ் சாரற் பரமன் சிராமலைசூழ்**
**அரணைத் தரங்கச் சுனையருகே நின்ற ஆய்மயிற்கே. 13**

(பரணித்தடையாவலர்கள் பெறுகுருரம்பைக் கிணமல்லமுத்தங்[கரண]த் தடங்கண்மலர் காதளவும் முன் காரதிருந்திரணைத் தடஞ்சரரற் பரமன் சிராமலை சூழ்சுனை திரணைத் தாங்கப் பிடித்துடியறுகெ நின்றபாயமயிற்கெ.)

இது தலைவியின் பேரெழில்கண்டு தலைவன் வியந்து கூறியது.

**பொ-ரை:-** ஈசனது சிராமலைச்சாரலைச் சூழ்ந்துள்ள சுனையின் கரையிடமாக நின்ற மயில்போல்வாளது

தென்னங்குரும்பைக்கு இணையான தனங்கள், மாலை யணிந்துள்ளன; பற்கள் முத்துக்கள்போல்வன; அகன்ற கண்மலர்கள் காதுகளை அளாவுவன எ-று.

கு-ரை:- பரணித்தொடையல்-பரணியுட்பெய்த மாலை; பரணி - செப்பு; 'மணிச் செப்பினுள் மன்னு மாலை' என்பர் (சீவக. 1667.) கரணம் - உடலின் சிறப்புடைக் கருவி. குரும்பைக்கிணையான தனங்கள் தொடையல் பெறுவன, பற்கள் முத்துக்கள்போலும், கண்மலர் காதினை அளவும் என்க. நான்காமடி பிழைபட்டிருப்பினும் ஊகித்தமைக் கப்பட்டது.

**மயிலா ருருவுக்கொவ் வேமென்று பேர்கில வஞ்சியென்று**
**பயிலா கிளியும் குயிலும் படையுண்கண் பார்த்துழைமான்**
**அயிலா தொழிகில ஐவனங் காவலெவ் வாறமைத்தார்**
**வெயிலார் மழுவன் சிராமலை வாழ்நர்தம் மெல்லியற்கே. 14**

(மயிலார் .... .... க .... .... மென்று பெரகில்வஞ்சி யென்று பயிலாக்கிளியும் மயிலும் படைக்குணகன் பார்த் துழைமா னயிலா தொழிகிலவை வளங்காவலெவ்வா றமைத்தார் வெயிலார் மழுவன் சிராமலை வாழ்நர்தம் மெல்லியற்கெ.)

**பொ-ரை;-** மயில்கள், நிறைந்த அழகுள்ள இவள் உருவுக்கு நாங்கள் ஒப்பாகோம் என்று பெயராவாயின; கிளியும் குயிலும், வஞ்சிபோல்வாள் இவளென்று வேறிடம் பயில்வன அல்ல; இவளது வாட்படை போலும் மையுண்ட கண்களைக்கண்டு உழைமான்கள் உண்ணாமல் தம்மிடம் நீங்கினவல்ல; இங்ஙனமான போது ஒளிமிக்க மழுவாயுதம் தரித்த ஈசனது சிராமலை

வாணர்கள் தம்மகட்குத் திரைப்புனங்காவலை எவ்வாறு அமைத்தனரோ எ-று.

கு-ரை:- மயிலார் - ஆர் சிறப்புப்பற்றிவந்த விகுதி. ஆர் உருவு என்று பிரித்து, நிறைந்த அழகுரு எனினுமாம். முதலடியில் மயில் வந்துவிட்டமையால் ஈண்டுக் (2) 'கிளியுங் குயிலும்' என்று பாடங்கொள்க.

**மெல்லிய செந்தமிழ் மாலைக்கு மெய்ப்பொருள் வேண்டு**
**சொல்லிய கோனிற் கருள்செய்த வன்சுழ லும்முகிலை [மெனச்**
**வல்லிய மால்களி றென்றுதன் வாளுகி ராற்கதுவச்**
**செல்லிழி சாரற் சிராமலை மேய திருவடியே. 15**

(மெல்லிய .... .... த .... .... மாலைக்கு மெய்ப்பொருள் வெணடுமெனச்சொல்லிய கொவிற்கருள் செய்தவன் சுழலும் முகிலை வல்லியமால் களிறென்று தன் வாளுகிராற்கதுவச் செல்விழிசாரற் சிராமலைமெய திருவடியெ.)

பொ-ரை:- மென்மைத்தன்மைவாய்ந்த செந்தமிழ் மாலையாகிய களவியல் நூலுக்கு உண்மைப்பொருள் தெரிய வேண்டும் என்று சொல்லி வேண்டிநின்ற பாண்டிய வேந்தற்கு, அவ்வாறே மெய்ப்பொருள்பெற அருள்செய்தவன் (யாவனெனில்), சூழ்ந்து திரியும் மேகத்தைப் பெரிய களிறுகள் என்று கருதிப் புலி தம் ஒள்ளிய நகங்களாற்பற்றி இழுக்க, அம்மேகங்கள் வானத்தினின்று இழிகின்ற சாரலுள்ள சிராமலைப் பெருமானே எ-று.

கு-ரை:- செந்தமிழ் மாலை - இறையனார் களவியல், செந்தமிழ்ப் பொருளிலக்கணம் கூறும் மாலை என்க;

வெண்பாமாலை, வச்சணந்திமாலை முதலியனபோல. மெய்ப்பொருள் - ஆசிரியர் கருத்தை விளக்கும் நல்லுரை; 'மெய்யுரை பெற்றும் இந்நூற்கு' என்று பாண்டியனும் புலவரும் மகிழ்ந்து கூறிய செய்தியை அக்களவியற் பாயிர வுரையுட் காணலாகும். கோ - பாண்டியன்; அவனுக்கு அருள்செய்தது உருத்திரசருமர் வாயிலாக என்க. இனி, செந்தமிழ் மாலையைத் திருமுகப் பாசுரம் என்றும், ஆளுடையபிள்ளையார் திருப்பதிகம் என்றும் கொண்டு, அவற்றிற்கேற்ப மெய்ப்பொருளான செல்வத்தைப் பரிசிலாகப்பெற அருளியவன் எனவுமாம். செல் - மேகம். திருவடி - பெருமான், சுவாமி; 'திருவடியை நாரணனை' என்றார் பெரியாரும். (திருவாய்.)

**வடிக்குங்கருங்குழல் மேலமைத் தாள்மொய்த்தவண்டகற்றிக்**
**கொடிக்குங் குமக்கொங்கை மேலுங்கொண் டாள்கொண்ட**
**பிடிக்கும்சிராமலையாதிதன் பேரருள்போலநன்றும் [லந்திமந்தி**
**தடிக்குங் கலையல்கு லாளன்ப நீதந்த தண்டழையே. 16**

(வடிக்குங்கருங்குழல் மெலமைத்தாள் மொய்த்த வண்டகற் றிக் கொடிக்குங்குமக் கொங்கைமெலுங் கொண்டாள் கொண்டலந்தி மந்திபிடிக்குஞ் சிராமலையாதிதன் பெரருள் பொலநன்றுந் தடிக்குங் கலையல்குலா[ளி]ன்ப நி தந்த தண்டழையெ.)

*இது தழை விருப்புரைத்தல்; தோழி தலைவற்குக் கூறியது.*

**பொ-ரை:-** *அந்திக்காலத்தில் மேகங்களை மந்தி பிடிக்கும் சிராமலைப் பெருமானது பேரருள்போல, என் தோழியான தலைவி, நீ அளித்த தண்ணிய தழையுடை*

யைத் திருத்தமாகமுடித்த கரியகூந்தலின்மேல் வைத்துத் தாங்கினள்; அதனிடமாக மொய்த்த வண்டுகளை ஓட்டிக் குங்குமச்சேற்றால் தொய்யில் எழுதிய தன் தனங்கள் மேலும் வைத்துத் தழுவிக்கொண்டாள் எ-று.

கு-ரை:- பேரருள்போல நீ தந்த தண்தழை என இயைக்க.

**தழைகொண்ட கையர் கதிர்கொண்ட மெய்யர் தளர்வுகண்டு**
**பிழைகொண்டுபொய்யென்று பேசிவிட்டேற்கவர் பேரருளான்**
**மழைகொண்ட கண்டர்தம் மாநீர்ச் சிராமலை வந்துநின்றார்**
**உழைகொண்ட நோக்கியின் றென்னுரைக்கேனவருற்றிடிலே.**

(தழைகொண்டகையர் [க]திர்கொண்ட மெய்யர்தளர்வுகண்டு பிழைகொண்டு பொய்யென்று பெசிவிட்டெற்கவர் பெரருளான் மழைகொண்ட கண்டர்தம்மானிர்ச் சிராமலை வந்து நின்ரு ருழைகொண்ட நொக்கி யின்றென்னுரைக்கெ னவருற்றிடிலெ.)

இது, தலைவன் தழையொடு வந்தமை தலைவிக்குத் தோழி உரைத்தல்.

**பொ-ரை:-** கையில் தழையுடையை உடையராகவும், ஒளிபொருந்திய மேனியராகவும், நம்பால்வந்த தலைவரது எளிய நிலைமைகண்டு அவர்பாற் பிழையினைக் கற்பித்துக்கொண்டு அவரொழுக்கம் பொய்யானதென்று கூறி, அன்று அவரை அனுப்பிவிட்டேன். (ஆனால்) அவரோ, மேகம்போலும் கறுத்த கண்டத்தை உடைய ஈசனது இச்சிராமலைக்கே நம்மிடமுள்ள பேரருளால்

வந்து நின்றார். அவர் நம்மிடம் முன்போல உற்றால் தோழீ! நான் அவர்க்கு உரைப்பது என்னோ எ-று.

கு-ரை:- தலைவரிடம் பிழையைக் கற்பித்துக்கொண்டு அவரொழுக்கம் பொய்யானது என்று கூறி, அவரை அன்று அனுப்பினளாயினும், அவர் நம்மிடமுள்ள விடாப் பேரருளுடையராய் இன்று வந்துநின்றார் என்பதாம்.

**உற்றார் தலையிட வொண்ணார் முகந்தன உண்டுமிக்க**
**துற்றா ரிடுவ ரெனத்தொழு தோங்கும் தொழார்புரங்கள்**
**செற்றார் சிராமலை சேரவல் லார்திரு நாமமெல்லாம்**
**கற்றார் கழல் கண்டிறைஞ் சாதவர் கைத்தலமே.** 18

(உற்றார் தலையிட வொண்ணார் முகந்த உண்டுமிக்க துற்றாரிடுவ ரெனத் தொழுதோங்குந் தொழார் புரங்கள் செற்றார் சிராமலை செரவல்லார் திருநாமமெல்லாங் கற்றார் கழல் கண்டிறைஞ்சாதவர் கைத்தலமெ.)

**பொ-ரை:-** தம்மைத் தொழாது பகைத்தவரது திரிபுரங்களை அழித்தவரும் சிராமலையிற் கோயில் கொண்டவருமான ஈசனது திருநாமங்களையெல்லாம் கற்றவரின் திருவடிகளைத் தரிசித்து வணங்காதவரின் கைத்தலம், 'சுற்றத்தார் தம் இல்லத்துத் தலையிடவும் இணங்கார்; தாம் தேடிய உணவினை உண்டு எஞ்சிய கவளத்தையேனும் எனக்கு இடுவார் யாவரோ' எனப் பிறரைத் தொழுது ஏக்கமுறும் எ-று.

கு-ரை:- தம் இல்லினிடம் தலையிடவும் உற்றார் ஒண்ணார் என்க. உற்றார் - சுற்றத்தார்; தலையிட - தலையைக் காட்டவும்; முகந்தன - நுகர்ந்தவை; துற்று - கவளம்.

உண்டு மிக்க துற்று ஆர் இடுவர் என்று சொல்லி, (இறைஞ்சாத) கைத்தலம் தொழுதவண்ணம் மேலெழும் என்க. 'தொழுதேங்கும்' என்று பாடங்கொள்ளினும் ஆம். சேரவல்லார் - அடைதற்கு உரிய ஈசன். 'அவிழ்ந்த துணியசைக்கும் அம்பலமும் சீக்கும், மகிழ்ந்திடுவார் முன்னர் மலரும்—கவிழ்ந்து, நிழல்துழாம் யானை நெடுமான் தேர்க் கிள்ளி, கழல்தொழா மன்னவர்தங் கை' (தண்டி. மேற்கோள்.) என்ற பாடலும் இக்கருத்தேபட வந்தது.

**கைத்தலைக் கார்மலை நெல்லிக் கனிபோற் கலைகளெல்லாம்**
**மெய்த்தலைப் பாட்டு விதியுணர்ந் தோர்தங்கள் வீதியெங்கும்**
**செய்த்தலை நீல மலரும் செழுநீர்ச் சிராமலையான்**
**பைத்தலைப் பாம்புகண் டீர்அரை மேற்கொண்ட பட்டிகையே.**

(கைத்தலைக் கராமலை நெல்லிக்கனிபொல் கலைகளெல்லா மெத்தலைப்பாடு விதியுணர்ந்தொர் தங்கள் விதியெங்குஞ் செய்த்தலை நில மலருஞ் செழுநீர் சிராமலையான் பைத் தலைப்பாம்புகண்டீ ரரைமெற் கொண்ட பட்டிகையெ.)

*இது, பிட்சாடனரான ஈசன்முன் பலியிட வந்த முனிபத்தினியரை நோக்கிப் பிறர் கூறியது.*

**பொ-ரை:-** *கரதலாமலகம்போலக் கலைகள் எல்லா வற்றினின்று உண்மை தலைப்படு நெறியை உணர்ந் தோர்கள் வாழும் வீதி எங்கும், வயற்கொடியான கருங் குவளையின் பூக்கள் மலர்கின்ற செழித்த நீர்வளமுள்ள சிராமலைப் பெருமான், தம் அரையில் அணிந்த பட்டிகை யானது வெறும் ஆபரணமன்று; தலையிற் படப் பையை யுடைய நாகம் என்று உணர்வீராக எ-று.*

கு-ரை:- ஆகவே, பிச்சையிடச் செல்லும்போது அந் நாகத்தால் உமக்கு ஏதம் நேராதபடி பார்த்துச்செல்லுங் கள் என்றபடி. கைத்தலை - கரதலம். கைத்தலை நெல்லிக் கனி, கார்மலை நெல்லிக்கனி என்க. மலை நெல்லி பெரிய உருவினது. மெய்த்தலைப் பாட்டு விதி - தத்துவஞானம் தலைப்படுதற்கு அமைந்தநெறி; பட்டிகை - அரைமேல் அணியும் கச்சு.

**பட்டிப் பசுமுன் படரத் தொடர்ந்துநின் பாடுசெல்லின்**
**முட்டித் திரியு முகில்போ லதிரு முரட்கயிற்றாற்**
**கட்டிக் கொடாளும் கருமஞ்சொன் னோம்கன்னி காரமெங்கும்**
**மட்டிற் கமழும் சிராமலை யீர்நும் மதவிடையே. 20**

(பட்டிப் பசுமுன் படரத் துடர்ந்து [நி]ன்பாடு செல்லின் முட்டித்திரியு முகில்பொ லதிரு முரட்கயிற்றாற் கட்டிக் கொடாளுங் கருமஞ் சொன்னெங் கன்னிகார மெங்குங் மட்டிக்கமழுஞ் சிராமலையிர் நுமதவிடையெ.)

இது, அம்முனிபத்தினியர் பிட்சாடனரான சிவ பிரானைப் பார்த்துக் கூறியது.

**பொ-ரை:-** கோங்கு மலர்களின் தேன் எங்கும் கமழ்கின்ற சிராமலைப் பெருமானே! நும் ஊர்தியான இடபமானது தன்முன் பட்டியான பசுவொன்று செல்ல அதனைத் தொடர்ந்து செல்வதாயினும் பலியிடவேண்டி நும்பக்கம் அணுகினால், எங்களை முட்டிவிட்டுத் திரிகின் றது; மேகம்போல் முழங்குகின்றது; ஆகவே, வலிய கயிற்றால் அதனைக் கட்டிவைத்து ஆள்வீராக; முதலிற் செய்ய இக்காரியத்தை நாங்கள் சொல்லலானோம் எ-று.

கு-ரை:- பட்டி - காவலற்றது; அடங்காதது. கன்னி காரம் - கோங்கு; மட்டின் - தேறல்.

**மதவிடைப் பாகன் மதியிடைப் பாகன் மழைநிறத்தோற்**
**குதவிடப் பாக னுமையிடப் பாக னுயர்கலிங்கு**
**கதவிடப் பாகு கமுகெழக் காமர் கடிநகர்வாய்ப்**
**புதவிடப் பாய்புனற் பொன்னிச் சிராமலைப் பொன்வண்ணனே.**

(மதவிடைப்பாகன் மதியிடைப்பாகன் மழைநிறத்தொர்க் குத விடப்பாக னுமையிடபாக னுயர்கலிங்கு கதவிடப்பாகு கமுகெழக் காமர் கடிநகர்வாய்ப் புதமடப் பாய்புனற் பொன்(ன்)னிச் சிராமலைப் பொன்வண்ணனே.)

**பொ-ரை:-** மதர்த்த இடபத்தை ஊர்ந்து செலுத்து பவன்; மதியின் பகுதியைத் தரித்தவன்; உமாதேவிக்குத் தன் திருமேனி யிடப்பாகத்தை அளித்தவன்; மேக வ்ண்ணனான திருமாலுக்கும் அவ்விடப்பாகத்தைக் கொடுத்தவன் (இத்தகையான் யாவனெனின்) நீர்க் கலிங்குகளில் அடைப்புக் கதவுகளை இடவும், கமுக மரங்களினின்று உதிர்ந்த பாக்குகள் நீர்மேலெழவும், அழகும் காவலுமுடைய நகர வாசலிற் கதவுகள் தாழிடப்படவும் பாயும்படியான காவிரியின் சார்பான சிராப்பள்ளி ஈசனே எ-று.

கு-ரை:- பாகு - பாக்கு; புதவு - கதவு.

**பொன்வண்ண மாளிகைப் பூந்தண்சிராமலைப் பள்ளிகொண்ட**
**மன்வண்ண மால்கட னஞ்ச மிருந்த மறைமிடற்றான்**
**தன்வண்ணம் தீவண்ணம் கண்டு தவிர்வண்ணம்வாடிச் சென்**
**மின்வண்ண நுண்ணிடை யாளெங் ஙனேசெய்யு [றான்**
**மெய்ப்பணியே. 22**

(பொன்வண்ணமாளிகைப் பூந்தண்சிராமலைப் பள்ளிகொண்ட
மன்வண்ண மால்கடனஞ்சம் மிருந்த மறைமிடற்ருன்றன்
வ வண்ணங் கண்டு தளிர்வண்ணம் வாடிச்
சென்ருன் மின்வண்ண நுண்ணிடையா ளெங்ஙனே செய்யு
மெய்ப்பணியே.)

இது, கோயிற்ஜெருண்டு புரியும் உருத்திர கணிகை யொருத்தியின் மோகநிலை கூறியது.

பொ-ரை:- மின்போலும் நுண்ணிய இடையை உடைய இப்பெண், பொன்னிறம் பொருந்திய மாளிகைகளையுடைய அழகும் தட்பமுங்கொண்ட சிராமலையில், திருமாலின் வண்ணமான கடனஞ்சம் தங்கிய வேத மோதும் கண்டத்தை உடைய ஈசனது நிறமான தீவண்ணத்தைக் கண்டு, தன் தளிர்போலும் நிறமாறி வாட்டமுற்று வெளியேறினள். இனி, தன் மெய்யாற் செய்தற்குரிய திருப்பணிகளை இவள் எங்ஙனம் புரிய வல்லவளாவள்? எ-று.

கு-ரை:- பள்ளிகொண்ட மன் - திருமால்; அவன் வண்ணமாகிய மால்கடல் என்றேனும், அவன்வண்ணமான நஞ்சு என்றேனும் கொள்க. நஞ்சம் இருந்ததும் மறையோதுவதுமான மிடற்ருன். அவனது தீவண்ணங் கண்டதனுல், நுண்ணிடையாள் தளிர்வண்ணம் வாடிச் சென்ருள் என்றவாறு. நுண்ணிடையாள் - கோயிலில் திருத்தொண்டு புரியும் தளிச்சேரிப்பெண்டு, உருத்திர கணிகை. ஈசனது பவனிகண்டு மோகித்துச்சென்ற இவள், அவன் கோயிற்றிருப்பணிகளை எங்ஙனம் செய்யவல்லவள் என்றபடி.

**பணியா வதுநஞ் சிராமலை மேய பரமற்கென்று**
**துணியா டையுமணி வாயகன் றுந்துவ ருட்டிக்கொங்கை**
**பிணியா தொழிந்தனை யோர்மனத் தேபிணிப் பான்தொடராய்**
**அணியா ரடிகள் பழந்தவஞ் சால வயிர்ப்புடைத்தே. 23**

(பணியாவது நஞ் சிராமலைமெய பரமற்கென்று துணியாடையு மணிவாய் நன்றுந் துவருட்டிக் கொங்கை பிணியா தொழிந் தனையொர் மனத்தெய் பிணிப்பான் றடயாயணியாரடிகள் பழந்தவஞ்சால வயிர்ப்புடைத்தெய்.)

*இது, பிட்சாடனரான ஈசனது தவவேடங்கண்டு ஐயமுற்ற முனிபத்தினியர், தம்முள் ஒருத்தியை நோக்கிக் கூறியது.*

பொ-ரை:- *திருத்தொண்டு செய்வது சிராமலையிற் பொருந்திய நம் பரமனுக்கே என்று துணிக; (அவரது அழகில் ஈடுபட்டு உன்) ஆடை நழுவுவதாயினும், அதனை எடுத்து இறுக உடுப்பாயாக; செங்குழம்பாற் கோலம் செய்து அன்னாரது மனத்தைப் பிணிக்கவேண்டிக் கொங்கைக் கச்சுக்களை நெகிழவிட்டுக்கொண்டு அவரைத் தொடர்வாயாக. (அப்போதுதான் அவரது உண்மை நிலை வெளியாகும்) இப்போதோ இந்தத் தாபதர்கோலம் பெரிதும் ஐயந்தாராநின்றது எ-று.*

**அயிர்ப்புடை யாய்நெஞ்ச மேயினித் தேறர மங்கையல்லள்**
**செயிர்ப்புடை யார்நம் திரிபுரம் செற்றான் சிராமலைவாய்ப்**
**பயிர்ப்புடை யாளடி பார்தோய்ந் தனபடைக் கண்ணிமைக்கும்**
**உயிர்ப்புடை யாளிவ் வுலகுடை யார்பெற்ற ஒல்கிடையே. 24**

(அயிர்ப்புடையாய் நெஞ்சமெ யினித்தெறர மங்கையல்லள்
செயிர்ப்புடையார்தந் திரிபுரஞ்செற்ருன் சிராமலைவாய்
பயிர்ப்புடையா ளடிப் பார்தொய்ந்தன படைக்கணிமைக்கு
முயிர்ப்புடையா ளிவ்வுலகுடையார்பெற்ற வொல்கிடையெ)

*இது, தலைவியைக் கண்டு ஐயுற்ற தலைவன் பின் தெளிந்து கூறியது.*

**பொ-ரை:-** *செற்றமுடைய பகைவரின் திரிபுரங்களை அழித்த ஈசனது சிராமலையில், இப்பெண் அடிக்கடி பயிலுதலுடையவள்; இவள் பாதங்கள் பூமியைத் தோய்ந்துநின்றன; வாட்படைபோன்ற கண்கள் இமைப்பன; (ஏதோ சிந்தனையால்) நெட்டுயிர்ப்பு உடையவளுமாகின்ருள்; இவற்ருல் இப்பூவுலகத்துக் குரியவர் பெற்ற பெண்ணே இவள்; ஆதலால், ஐயங்கொண்ட நெஞ்சமே! இனித் தெளிவாயாக எ-று.*

**கு-ரை:-** *செயிர்ப்பு-செற்றம், பகைமை; பயிர்ப்பு-பயிலுதல்; உலகுடையார்-பூவுலகாள்பவர்.*

**கிடைவாய் மடந்தையும் மைந்தனும் கேட்கிற் சிராமலையான்**
**அடைவா யவரை யணையார் கிளைபோ லழிந்துபட்டார்**
**கடைவாய் நிணந்தின்ற பாவிதன் காதற் கரும்பெடையின்**
**முடைவாய் புகச்சொரி முள்மரக் கானத்து முன்னினரே. 25**

(கிடைவாய் மடந்தையு மைந்தனுங் கெட்கிற் சிராமலையா
னடைவா யவரையணையார் கிளைபொ லழிந்துபட்டார்
கடைவாய் நிணந்தின்றபாவிதன் காதற் கரும்பெடையின
முடைவாய்புகச்சொரி முண்மாக்காளத்து முன்பினரெ.)

இஃது, உடன்போக்கிற் கண்டோர் செவிலிக்குக் கூறியது. உடன்போகிய மகட்கு இரங்கி அவள் கூறியதூஉம் ஆம்.

**பொ-ரை:-** *நீர் எம்மை உசாவுமிடத்து, செங்கிடை போல் வாயினை உடைய மடந்தையும், அவள் காதலனை மைந்தனும், சிராமலை ஈசனைப் புகலிடமாகக்கொண்ட தொண்டரை அணுகி வாழாதவரது சுற்றம்போலக் காட்டிடையே அழிந்தொழிந்தவரின் கடைவாய் நிணத்தைத்தின்ற பாவியான புட்கள், தம் காதற்குரிய கரிய பெடையின் ஊன்நாறும் வாயினுள் அந்நிணத்தைச் சொரியும் முள்மரங்கள் அடர்ந்த காட்டினிடத்தை அடையலாயினர் எ-று.*

கு-ரை:- *கிடை - செந்நெட்டி; கேட்கின் - உசாவின்; அடைவாயவர்-புகலிடமாக்கொண்ட தொண்டர்; அடைவு-அடையும் இடம். காட்டிற் பட்டோரது கடைவாய் நிணத்தைத் தானுந்தின்று தன் பெடைவாய் புகவும் சொரியும் கானம் எனவும், கிளைபோல மடந்தையும் மைந்தனும் கானத்து முன்னினர் எனவும் இயைக்க. கிளைபோல் அழிந்துபட்டார் எனினும் ஆம். பாவி - காகம் கழுகுபோலும் நிணந்தின்னும் புட்கள். 'காக்கைக்கே இரையாகிக் கழிவரே' என்ப (அப்பர்.)*

**முன்வந்து நின்றனை என்னுரைக்கேன் முகிழ்மென் முலைக்கீழ்**
**மின்வந்து நின்றன்ன நுண்ணிடை யாய்விதி யேவலுந்தப்**
**பொன்வந்த கொன்றையர் பூந்தண் சிராமலை போற்றலர்போல்**
**பின்வந்து வன்கா னவர்நகைப் பாடும் பெருஞ்சுரத்தே. 26**

([மு]ன்வந்துநின் றனை யென்னுரைக்கென் முகிழ்மென் முலைக்
கிழ் மின்வந்துநின் றனன் நுண்ணிடையாய் விதியெவலிந்த
பொன்வந்த கொன்றையர் பூந்தண் சிராமலை பொற்றலர்
போல் பின்வந்து வனகானவர் கைய்ப்பாடும் பெருஞ்
சுரத்தெ.)

*இது, பிரிந்துசென்ற தலைவன் சுரத்திடைத் தலைவி யின் உருவெளிப்பாடு கண்டு கூறியது; உடன்போக்கில் சுரத்தின் ஏதப்பாடு கண்டு அவன் கூறியதூஉமாம்.*

**பொ-ரை:-** *பொன்போலும் கொன்றைப்பூ அணிந்த பெருமான் வீற்றிருக்கும் அழகும் தண்மையுமுடைய சிராமலையை வாழ்த்தாதவர்போல, வழிச்செல்வாரின் பின்பக்கமாக வந்து கொடிய கானவர் பரிகாசம் புரியும் பெரிய சுரத்தில், மின்னலே வந்து நின்றதுபோலும் நுணுகிய இடையுடையாய்! விதியின் ஏவல்செலுத்த என் முன்னராக வந்து நின்றனையே; இதனை யான் என்னென்று சொல்வேன் எ-று.*

கு-ரை:- *'விதியே வலித்த' என்றும் கொள்ளலாம். வலித்தல் - இழுத்துக்கொண்டுவருதல்; நகைப்பு ஆடும் - இகழ்ச்சிநகை புரியும்.*

**பெருஞ்சிலையாற்புர மூன்றெரித்தோன்பிறைக் கோட்டுக்கைம்**
**உரிஞ்சிலை தேங்கமழ் பாங்கர்ச் சிராமலை யுள்ளலர்போல் [மா**
**வருஞ்சிலை யோர்நும ராகின் மறைவன் வன்கானவரேற்**
**கருஞ்சிலை யாலழிப் பன்கலங் காதுநில் காரிகையே. 27**

(பெருஞ்சிலையாற் புரமுன்றெரித்தொன் பிறைக்கொட்டுக்
கைம்மாவுரிஞ்சிலை தெங்கமழ் பாங்கற் சிராமலை யுள்ளலர்
பொல் வருஞ்சிலையொர் நுமராகின் மறைவன் வன்கானவ
ரெற் கருஞ்சிலையா லழிப்பன் கலங்காது நிற்காரிகையெ.)

இஃது உடன்போக்கில், தலைவியின் தமராயினோர் சுரத்திடைச் செல்லும் தலைமக்களைப் பின்தொடர, அதுகண்டு அஞ்சிய தலைவிக்குத் தலைவன் கூறியது. இதனைக் 'கற்பொடு புணர்ந்த கவ்வை' என்பர் தொல்காப்பியனார்,

**பொ-ரை;-** மேருவாகிய வில்லைக்கொண்டு திரிபுரத்தை எரித்த ஈசனது சிராமலையை நினையாதவர்போல நம்மை எதிர்த்துவரும் வில்லாளிகள் உன்னுடைய சுற்றத்தவரானால், பிறைவடிவான கொம்பினையும் துதிக்கையினையுமுடைய யானைகள் உரசுதலால் விழும் மரத்திலைகள் தேன்மணங்கமழும் இம்மலைப் பக்கம் ஒன்றில் மறைந்து கொள்வேன்; அவரன்றி வேறுகானவராயின், எனது கொடியசிலையால் அம்பெய்து அழிப்பேன்; எதற்கும் பெண்ணே! கலங்காது நிற்பாயாக எ-று.

கு-ரை:- 'நுமராகின் மறைவன்' என்றது, தலைவியின் தமர்க்கு ஏதப்பாடு விளைக்கின் அவட்குப் பெருந்துயராம் என்பது கருதி. 'மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை, மணவிடு மருங்கி னிரும்புறம் பொருந்தி, அமர்வரி னஞ்சேன் பெயர்க்குவென், நுமர்வரின் மறைகுவன் மாஅ யோளே' - என்ற நற்றிணைக்கருத்து ஈண்டு ஒப்பிடத்தகும். இப்பாட்டில் அமைந்தவாறே 'தேங்கமழ்பாங்கரில் மறைகுவன்' என்றியைக்க.

**காரிகத் தாழ்பொழிற் கண்ணார் சிராமலைக் காமர்கொன்றைத்**
**தாரிகத் தாழ்சடைச் சங்கர னேசதி ரொப்பனகொல்**
**பாரிகத் தாழுநின் பாதம் பணிந்தவ ரேதமஞ்ச**
**வோரிகத் தாவருங் கானகத் தாடி யுறைகின்றதே. 28**

(காரிகத் தாழ்பொழிற் கண்ணூர் சிராமலைக் காமர் கொன்றைத்
தாரிகத் தாழ்சடைச் சங்கரனெ சதிரொப்[ப]னகொ பாரிகத்
தாழுநின் பாதம் பணிந்தவ ரெதமஞ்ச வொரி கந்தாவருங்
க[ா]னகத்தாடி யுறைகின்றதெ.)

**பொ-ரை:-** *மேகங்கள் மேலே கடக்கும்படி தாழ்ந்துள்ள பொழில்கள் அமைந்த சிராமலையில் எழுந்தருளிய பெருமானே! பூமியைக்கடந்து தாழும் நின் திருவடிகளைப் பணியும் அடியார்கள், ஏதப்பாட்டுக்கு அஞ்சும்படி கிழநரிகள் ஊளையிடும் இடுகாட்டில், நீர் ஆடிக்கொண்டு உறைவது உம்முடைய பெருமைக்கு ஒப்பதோ? எ-று.*

கு-ரை:- *'இக' எனவரும் எதுகைச் சொற்கள் கடத்தல், விலகுதல் என்ற பொருளுடையன. சதிர்-சாமர்த்தியம், பெருமை; ஓரி -முதுநரி.*

**உறைவாய் சிராமலை யுள்ளுமென் சிந்தையி னுள்ளுமென்றும்**
**பிறைவாய் மழுவாட் பெரியவ னேநுன் பியற்கணிந்த**
**கறைவா யரவங் கடியா வகையடி யேனறியேன்**
**அறைவா யழலுமி ழும்புரிந் தாடி யலமருமே. 29**

(உறைவாய் சிராமலையுள்ளுமென் சிந்தையினுள்ளு மென்றும்
பிறைவாய் மழுவாட் பெரியவனெ நுன்பியற் கணிந்த
கறைவாயரவங் கடியாவகை யடியெ னறியெனறைவாயழ
லுமிழும் புரிந்தாடி யலமருமெ.)

*இது, பிட்சாடனப் பெருமானுக்கு ஐயமிடவந்த பெண்ணின் கூற்று.*

**பொ-ரை:-** *சிராமலையிலும், என் சிந்தையிலும் என்றும் உறைபவனே! மழுவாளைத்தரித்த பெருமானே! உமக்குப் பலியிடவரும் நான், உமது கழுத்தின் பின்புற மணிந்த விடவாயினையுடைய அரவங் கடியாதவகையில் (உம்மையணுக) எனக்குத் தெரியவில்லை. (யான் நெருங்கும்போது) பிளந்தவாயினின்று நச்சழலை வெளியிட்டு விருப்புடன் ஆடிச் சுழலுகின்றது. (இதனைத் தடுத்துக் காட்டீராக) எ-று.*

கு-ரை:- *பிறைவாய் மழுவாள் - பிறையையும் கூர் வாயினையும் உடைய மழுவாள்; பிறைபோலும் வாயினை யுடைய எனினுமாம். அலமருதல் - சுழலுதல்.*

**அலமரு நெஞ்சத் தரிவைகண் டாற்றுங்கொல் போற்றலர்தங்**
**குலமரு முப்புரங் கொன்றவன் கோலச் சிராமலைசூழ்**
**நிலமரு தேன்றுளி நித்திலங் கோப்ப நெடும்பொழில்கள்**
**சலமரு வெள்வடம் பூணத்தண் காநெடுந் தாழ்பனியே. 30**

(அலமருநெஞ்சத் தரிவைகண் டாற்றுங்கொல் பொற்றலர்தங் குலமரு முப்புரங்கொன்றவன் கொலச்சிராமலை சூழ் நிலமரு தென்[று]ளி நித்திலங் கொப்ப நெடும்பொழில்கள் சலமரு வெள்வடம் பூணத் தண் கானெடுந் தாழ்பனியெ.)

*இது, பனிப்பருவங் கண்ட தோழி, தலைவியின் பிரிவாற்றுநிலைக்கு வருந்திக் கூறல்.*

**பொ-ரை:-** *திரிபுராந்தகனான ஈசனது அழகிய சிராமலை சூழ்ந்த நிலமானது தேன் துளிகள் நிரம்புதலால் முத்துக்கள் கோத்தனபோலத் தோன்றவும், நீண்ட*

பொழில்கள் நீர்த்துளி மருவுதலால் வெண்மணிகளா லான வடம் பூண்டதுபோல விளங்கவும், தண்ணிய கானகத்து வீழ்ந்துள்ள பனிகளைக் கண்டும், வருந்தும் மனத்தையுடைய நம்பேதை பிரிவாற்றவல்லளோ எ-று.

கு-ரை:- மரு என வருவன மருவும் என்பதன் திரிபு. போற்றலர் - வாழ்த்தாத பகைவர்.

**பனிப்படம் போர்த்தனள் பார்மகள் யானும் பசலையென்னும்**
**துனிப்படம் போர்த்திங்குத் தேனங்குத் தாரன்பர் துங்கக்கைம்மா**
**முனிப்படம் போர்த்த பிரான்சிராப் பள்ளியு மூரிக்கொண்மூத்**
**தனிப்படம் போர்க்கும் பருவமன் றோவந்து சந்தித்ததே. 31**

(பனிப்படம் பொர்த்தனள் பார்மகள் யானும் பசலையென்னுந் துனிப்படம்பொர்த் திங்குத்தெ னங்குத்தா ரன்பர் துங்கக் கைம்மா முனிப்படம் பொர்த்தபிரான் சிராப்பள்ளியு மூரிக் கொண் முத்தனிப்படம் பொர்க்கும் பருவமன்றொ வந்து சந்தித்ததெ.)

இது, தலைவி கார்ப்பருவங்கண்டிரங்கிக் கூறியது.

**பொ-ரை:-** உயரிய யானைத்தோலைப் போர்வையாக் கொண்டபெருமானது சிராப்பள்ளியும் பெருத்த மேகங் களாகிய ஒப்பற்ற போர்வைச்சீலையைப் போர்க்கும் பருவ மன்றோ இப்போது நம்மை அணுகியது; இக்காலத்தே பூமிதேவி பனியாகிய போர்வையைப் போர்த்துக்கொண் டனள். (அத்தகைய போர்வையின்றி) யானும் துயர் தரும் பசலை என்ற படாத்தைப் போர்வையாகக்கொண்டு இவ்விடமே உற்றேன்; நம் அன்பரோ, நெடுந்தூரத்தே தங்கி உறைவராயினர்; (என்செய்வேன்) எ-று.

கு-ரை:- இங்குத்தேன், அங்குத்தார் - இங்குற்றேன், அங்குற்றார் என்பவற்றின் திரிபுகள். இவற்றை அங்குத்தை, இங்குத்தை என்ற வழக்குடன் ஒப்பிடுக; 'எங்குத்தைக்குச் செலுமிது' என்றார் நம்பியாண்டார் நம்பிகளும் (ஏகாதசமாலை). கைம்மாமுனி - இளங்களிறு. நிலமகளும் பிராப்பள்ளியுமே இப்பருவக் கொடுமையைக் கடத்தல் வேண்டித் தக்க போர்வைகளைத் தாங்கி நின்றபோது, எனக்கு வாய்த்த போர்வை துயரமே போலும் என்பதாம்.

வந்துசந் திக்கிலர் காதலர் பேதையை வாதைசெய்வான்
அந்திசந் திப்ப வெழுந்த தூன்றன் சிராமலைவாய்க்
கொந்துசந் திக்குசெங் காந்தண் முகைகொண்டு கொண்டிடு
மந்திசந் திப்ப வரவென் றுள்ன் வாடு மதிப்பகையே. [வான்

(வந்து சந்திக்கிலர் காதலர் பேதையை வாதைசெய்வா னந்தி சந்திப்ப வெழுந்து தூன்றன் சிராமலைவாய்க் கொந்து சந்திக்க செங்காந்தண் முகை கொண்டு கொண்டிடுவான் மந்திசந்திப்ப வாவென் றுளவாடு மதிப்பகையே.)

இஃது மாலைப்பொழுது கண்டு தோழி வருந்துதல்.

பொ-ரை:- ஈசனது சிராமலையில் பூங்கொத்துக்கள் பொருந்திய செங்காந்தள்மரத்தின் மொட்டினைக் கையிற் கொண்டு தன்னோடுபற்றிச் செல்வதற்காக மந்திகள் நெருங்கும்போது, பகையாகிய மதியானது மனம் வாடாநின்றது; பேதையான தலைவியை வருத்தவேண்டி அந்திக்காலமும் அணுகியது; இத்துயர்நீங்க நம் காதலரோ நம்மை அணுகுவாரல்லர் எ-று.

கு-ரை:- காந்தள்முகை பாம்பின்படம் போல்வதா தலின், அதனைத் தன் பகையாகிய அரவு என்று மதி உள் வாடுவதாயிற்று. கொந்து - கொத்து.

**மதியும் பகையன்னை வாயும் பகைமனை யும்மனைசூழ்**
**பதியும் பகைபகை யன்றிலென் றும்பகை பான்மைதந்த**
**விதியும் பகையெனி லும்மன்ப ரன்பினர் வெள்ளக்கங்கை**
**பொதியும் சடையன் சிராமலை போலுமெம் பூங்குழற்கே. 33**

(மதியும் பகைமுன்னைவாயும் பகை மனையும் மனைசூழ் பதியும்
பகை பகை யன்றில் எ[ந்]ன்றும் பகை பான்மை தந்த
விதியும் பகை யெனிலும் மன்ப ரன்பினர் வெ[வ]ள்ளக்கங்கை
பொதியுஞ்சடையன் சிராமலைபொலு மெம்பூங்குழற்கெ.)

*இது, இராப்பொழுது கண்டு தோழி வருந்துதல்.*

பொ-ரை:- கங்கைவெள்ளம் பொதிந்து நின்ற சடாபாரத்தைக்கொண்ட ஈசனது சிராமலைபோன்ற நம் தலைவிக்குச் சந்திரனும் பகை; அவளை இல்லத்திருத்தி கடியும் அன்னைவாயும் பகை; மனையில் உள்ளாரும் மனையைச் சூழ்ந்த பதியிலுள்ளாரும் பகைகள்; காதலால் பிரிவாற்றமல் விடாது கூவும் அன்றிற்புள் நமக்கு என்றுமே பகை. இத்தன்மைகளை விளைத்த விதியும் பகை; இவ்வாறு பகைகள் மிக்கனவாயினும், நம் காதலர் நம்பாற் பேரன்பினர் (ஆதலின் இவற்றால் கேடில்லை) எ-று.

கு-ரை:- மனையும் பதியும் என்ற எண்ணும்மைக் கேற்பப் பகைபகை என்று அடுக்கப்பட்டது.

**குழனெறி காட்டிய கொம்பனை யாரொடுங் கொண்டசுற்றம்**
**அழனெறி காட்டி யிடத்தெனக் குத்தனக் கன்பர்சென்ற**
**பழநெறி காட்டும் பரன்சிராப் பள்ளி பரவக்கற்றேன்**
**முழுநெறி யாயினுஞ் செல்லே னினிச்செல்வர் முன்கடைக்கே**

(குழனெறிகாட்டிய கொம்பனையாரொடுங் கொண்டசுற்ற
மழனெறிகாட்டியிடத் தெனக்குத் தனக்கன்பர் சென்ற
பழனெறிகாட்டும் பரன் சிராப்பள்ளி பரவக்கற்றேன் முழு
நெறியாயினுஞ் செல்லே னினிச்செல்வர் முன்கடைக்கே.)

**பொ-ரை:-** *கூந்தலழகுடையவராய பூங்கொம்பு போலும் பெண்டிரும் சுற்றமும் எனக்குத் தீநெறிகாட்டி நிற்கும்போது, தன் அடியார் சென்ற பழைய முறையைத் தெரிவித்தருளும் ஈசனது சிராப்பள்ளியைத் துதிப்பதற்கு நான் கற்றுக்கொள்ளலானேன், இனிச் செல்வரின் மனைவாயிலிற் சென்று இரத்தற்கு, அது முழுதும் உய்யும் நெறியேயாயினும், செல்லேன் எ-று.*

கு-ரை:- *குழல் நெறி - கூந்தலின் பின்னல் முறை; அழல் நெறி - தீவழி, எரிவாய் நிரயவழியும் ஆம்; பழநெறி - முத்திமார்க்கம்.*

**இனிச்செல்வர் முன்கடைக் கென்செயச் சேறுமினைய னெஞ்சே**
**கனிச்செல்வ மாம்பொழிற் காவிரித் தென்கரைப் பூவிரிக்கும்**
**முனிச்செல்வர் சேருஞ் சிராப்பள்ளி மேயமுக் கட்சுடரைத்**
**தனிச்செல் வனைப்பணிந் துள்ளமிர் தூறித் தடித்தனமே. 35**

(இனிச்செல்வர் முன்கடைக் கென்செயச் செறுமினைய னெஞ்
செய் கனிச்செல்வமாம் பொழிற்காவிரித் தென்கரைப்
பூவிரிக்கும் முனிச்செல்வர் செருஞ் சிராப்பள்ளி மெய
முக்கட்சுடரைத் தனிச்செல்வனைப் பணிந் துள்ளமிர்தூறித்
தடித்தனமெ.)

**பொ-ரை:-** கனிகளாகிய செல்வத்தைக் கொண்ட மாஞ்சோலைகளையுடைய காவிரியின் தென்கரையில் உள்ளதும், தவச்செல்வர்கள் சேர்வதும், பூக்கள் மலர்ந்ததுமான சிராப்பள்ளியில் கோயில் கொண்ட முக்கட்சுடரும், நித்திய ஐசுவர்யமுள்ளவருமான ஈசனைப் பணிந்து அதனால் ஆனந்தாமுதம் ஊறி உள்ளும் புறமும் பூரித்தோம்; இனி அநித்தியமான செல்வமுடையாரின் தலைவாயிற்கண் என்னகாரியம் வேண்டிச் சென்று நிற்கக்கடவேம் எ-று.

**தடித்த குராங்கமழ் சாரற் சிராமலைச் சங்கரன்றன்**
**கொடிக்கண்வெள் ளேறன்ன வேற்றினைக் கூர்ங்கோ டிறைத்**
**படிக்கண்விட் டார்த்தன ராயரதனைப்பருவலியாற் [தரண்சூழ்**
**பிடித்தமொய்ம் பற்கின் றெளியளன் றோவெங்கள்**
**பெண்ணமுதே. 33**

(தடித்த [சுறத]ங்கமழ் சாரற் சிராமலைச் சங்கரன்றன் கொடிக் கண்ட வள்ளெறன்ன வெற் றிணைக்கரங்கொ டிறைத் தரண் சூழ் படிக்கண்விட் டார்த்தன ராயர் தனைப்பருவலியாற் பிடித்த மொய்ம்பர்க்கின் றெளியளன்ரு வெஙகள் பெண்ணமிர்தெ.)

இஃது ஏறுகோள்; அஃதாவது கட்டினை யவிழ்த்து வாலுருவி வெளியேற்றிவிட்ட வலிய ஏற்றினைத் தழுவிப் பிடிப்பவற்கே தம்மகளைக் கொடுப்பதாகிய ஆயர் மணமுறை.

**பொ-ரை:-** பெருத்த குராமலர்கள் கமழும் சாரலுடைய சிராமலை ஈசனது கொடிச்சீலையில் எழுதிய இடபம் போலும் வெள்ளேற்றின் கொம்புகளைச் சீவிக்

கூர்மையாக்கி வேலி சூழ்ந்த நிலத்திடமாக அதனை வெளியேற்றி ஆரவாரித்தனர் ஆயர்கள். அவ்வாறு விடப்பெற்ற ஏற்றைத் தம் வலிமையால் தழுவிப் பிடிக்கும் வீரனுக்கே இப் பெண்ணமுதம் நுகர்தற்கு எளியளாவளன்றோ எ-று.

கு-ரை:- குராம் - குரவமரம்; பாவைபோலும் பூவுடையது. 'கொடிக்கண்ட வேறென்ன' என்றும் கொள்ளலாம். 'ஏற்றினைக் கரங்கொடு' என்பதனை 'ஏற்றினைக் கூர்ங்கோடு' என்று திருத்துக. அதனை என மூன்றும் அடியில் ஒருமையாக வருதலால், ஏற்றினை என்று கல் எழுத்தில் உள்ளது தவறும். அரண் சூழ் படி - ஏறுகளை வெளிவிடுதற்குரிய வேலியமைந்த நிலம்.

**பெண்ணமிர் தைப்பார் பெறுந்தே னமிர்தைப் பிறைநுதலீர்**
**வண்ணப் பயலை தணிவித்தி ரேல்வம்மின் செம்மனத்துக்**
**கண்ணப் பனுக்கருள் செய்த சிராமலை யானைக்கண்டு**
**விண்ணப்ப முஞ்செய்து வேட்கையும் கூறுமின் வேறிடத்தே.**

(பெண்ணமிர்தைப் பார்பெருந் தெனமிர்தைப் பிறைநுதலை வண்ணப்பயலை தணிவித்திரெல் வம்மின் செம்மனத்துக் கண்ணப்பனுக் கருள்செய்த சிராமலையானைக் கண்டு விண்ணப்பமும் செய்து வெட்கையுங் கூறுமின் வெறிடத்தெ.)

இது, பிரிவாற்றாத தலைவியின் விரகநோயினை ஆற்றப்புகும் ஆயத்தாரை நோக்கி முதுபெண்டிர் கூறியது.

**பொ-ரை:-** நுதலழகுடைய பெண்காள்! பெண்ணமுதமும் பூமிபெற்ற தேனமுதமுமாகிய தலைவியின்

பசலைவண்ணம் பரவிய விரகநோயினைத் தணிக்க வேண்டினீராயின், வாருங்கள் சொல்லுகின்றேன்; கண்ணப்பதேவர்க்குத் திருவருள்புரிந்த சிராமலைப் பெருமானைக்கண்டு அவரிடம் உள்ள செய்திகளைத் தனித்ததோர் இடத்தே விண்ணப்பம்செய்து இவளுற்ற வேட்கையினையும் கூறுவீராக எ-று.

கு-ரை:- கண்ணப்பர் - நக்கீரதேவர் முதலிய முன்னோர்போற்றிய சிவனடியார். முதலடியில், 'பிறைநுதலை' என்று பாடங்கொள்ளுமிடத்து, வம்மின் கூறுமின் எனப் பின்வரும் பயனிலைகட்கு எழுவாயில்லையாதல் காண்க.

**வேறுகண்டாய் நெஞ்ச மேதள ரேல்விளை மாங்கனியின்**
**சேறுகண்டா ருண்சி ராமலை யாதிதன் செல்வஞ்சொன்னால்**
**யாறுகண் டாயவன் தேவியில் லம்பல மேற்பதையம்**
**ஏறுகண் டாயவ னேறிப்பல் காலு மியங்குவதே. 38**

(வெறுகண்டாய் நெஞ்சமெ தளரெல் விளைமாங்கனியின் செறு கண்டாருண் சிராமலையாதிதன் செல்வஞ் சொன்னல் யாறு கண்டா யவன்றெவி யில்லம்பல மெற்ப தைய்ய மெறு கண்டா யவனெறிப் பல்லகாம் மியங்குவதெ.)

**பொ-ரை:-** நன்றாகப் பழுத்த மாங்கனியின் இரசங்களைக் கண்டவரெல்லாம் உண்ணும்படியுள்ள சிராமலையீசனது செல்வ நிலையைக் கூறுமிடத்து—அவன் தேவி கங்கையாவள்; வீடு அம்பலமாகும்; ஏற்றுண்பது பிட்சையாகும்; அதன்பொருட்டு அவனேறிப் பன்முறையும் சென்றுவருவதற்கு (ஊர்தியாகக்) கொண்டது இடபமாகும். ஆதலால் (அவ்வீசனது நிலை உலகச் செல்வரின் நிலையினும்) வேறுபட்டதுகாண்; இவ்வாருன

*வேறுபாடுபற்றி நீ அவனைத் தொழுவதில் தளர்ச்சி கொள்வேல் எ-று.*

**காலால் வலஞ்செய்து கையால் தொழுதுகண் ணாரக்கண்டு**
**மேலா னவருடன் வீற்றிருப்பா னெண்ணில் மெய்ப்புலவீர்**
**சேலார் கழனிச் சிராமலை மேயசெம் பொற்சுடரைப்**
**பாலா னறுநெய்யொ டாடியைப் பாடிப் பணிமின்களே. 39**

(காலால் வலஞ்செய்து கையாற்றொழுது கண்ணாரக் கண்டு மெலானவருடன் விற்றிருப்பா னெண்ணில் மெ[ய்]ப்புலவிர் செலார்கழனிச் சிராமலைமெய செம்பொற்சுடரைப் பாலா னறுநெய்யொ டாடியைப் பாடிப் பணிமின்களெ.)

**பொ-ரை;-** *மெய்ம்மையுள்ள புலவீர்காள்! விண்ணோரும் அடியார்களுமான மேலானவருடன் கூடி நன்கு வாழ்தலை நீவிர் விரும்பினிராகுல், சேல் மீன்கள் நிறைந்த வயலுடைய சிராமலையில் மேவிய செம்பொன் போன்ற சோதியானவனும், ஆன்பாலையும் ஆன் நெய்யையும் திருமஞ்சனமாகக்கொண்டு ஆடுபவனுமான ஈசன் திருக்கோயில்களைக் கால்களால் வலஞ்செய்தும், கரங்களால் அஞ்சலி செய்தும், கண்களால் தரிசித்தும், வாயாற் பாடியும் வணங்குங்கள் எ-று.*

**பணிமின்கள் பாதம் பகர்மின்கள் நாமங்கள் பாரகத்தீர்**
**தணிமின்கள் சீற்றம் தவிர்மின்கள் பொய்ம்மை தவம்புகு**
**கணிமின்கள் ஏனற் கிளிகடி மாதர்தங் கைவிசைத்த [நாள்**
**மணிமின்கள் போலொளிர் வான்றோய் சிராப்பள்ளி**
**வள்ளலுக்கே. 40**

(பணிமின்கள் பாதம் பகர்மின்க ளுமங்கள் பாரகத்திர் தணி
மின்கள் சிற்றந் தவிர்மின்கள் பொய்ம்மை தவம்புகுநாள்
கணிமின்க ளெனற் கிளிகடிமாதர்தங் கைவிசைத்த மணி
மின்கள்பொ லொளிர் வான்ருெய் சிராப்பள்ளி வள்ள
லுக்கெ.)

**பொ-ரை:-** *தினைப்புனத்தில் கதிர்கொய்ய வரும் கிளிகளை ஓட்டும் பெண்கள் தங்கள் கைகளினின்றும் வேகத்துடனெறிந்த மணிகள், மேகத்து மின்கள்போல் விளங்குவதும், விண்ணையளாவுவதுமான சிராமலை வள்ளலாகிய ஈசன்பொருட்டாகவே, உலக மக்காள்! அவன் திருவடிகளைப் பணியுங்கள்; அவன் திருநாமங் களைக் கூறுங்கள்; யாருடனும் சினங்கொள்ளுதலை ஒழிமின்கள்; பொய் பேசுதலைத் தவிர்மின்கள்; தவ நிட்டை கூடும் நாள்களையே நன்னுள்களாகக் குறிக் கொள்ளுங்கள் எ-று.*

**வள்ளலுக் கும்மலை மாதர்தங் கோனுக்கு வார் சடைமேல்**
**வெள்ளெருக் கும்மதி யும்பொதிந் தானுக்கு வெண்பளிங்கு**
**தெள்ளலைக் கும்மரு விச்சிராப் பள்ளிச் சிவனுக்கன்பாய்**
**உள்ளலுக்குந்நன் றுநோற்றதன் ருேவென் றுணர்நெஞ்சமே.**

(வள்ளலுக்கும் மலைமாதர்தங் கொனுக்கு வார்சடைமெல்
வெள்ளெருக்கும் மதியும் பொதிந்தானுக்கு வெண்பளிங்கு
தெள்ளலைக்கும் மருவிச் சிராப்பள்ளிச் சிவனுக்கன்பா
யுள்ளலுக்கு நன்றுநொற்றதன்ருே வென்றுணர்நெஞ்சமெ.)

**பொ-ரை:-** *வள்ளலும், உமாபதியும், வெள் ளெருக்கையும் மதியையும் சடாபாரத்தில் அணிந்த வனும், வெண்பளிங்குபோல் தெளிவுகொண்டு அலை*

வீசும் அருவியினை உடைய சிராப்பள்ளியில் கோயில் கொண்டவனுமாகிய ஈசனுக்கு, உண்மையுணர்ந்த என் நெஞ்சமானது அன்புபூண்டு அவனையே தியானிப்ப தற்குப் பெரிதும் தவம் புரியலாயிற்று எ-று.

கு-ரை:- அம்மலை மாதர், அகரம் உலகறிசுட்டு; உணர் நெஞ்சம் - உண்மை யுணர்ந்த நெஞ்சம்; உணர் நெஞ்ச மாதலால் அன்புகொள்வதற்கும், உள்ளலுக்கும் நோற்றது என்க.

**நெஞ்சந் துணையுண்டு நீர்நிலத் துண்டு நிழலுமுண்டு**
**தஞ்சப் பெருக்குள தானஞ் சிராமலைச் சாரலுண்டு**
**துஞ்சுந் துணையுஞ் சிவனைத் தொழுது துறக்கமெய்தார்**
**பஞ்சந் நலியப் பலிதிரி வார்சிலர் பாவியரே. 42**

(நெஞ்சம் துணையுண்டு நிர்நிலத்துண்டு நிழலுமுண்டு தஞ்சப் பெருக்குளதா னஞ் சிராமலைச் சாரலுண்டு துஞ்சுந்துணையுஞ் சிவனைத்தொழுது துறக்க மெய்தார் பஞ்சந்நலியப் பலி திரிவார் சிலர் பாவியரே.)

பொ-ரை:- நமக்கு அறிவூட்டும் துணையாக நெஞ்ச முள்ளது; நிலத்திலே நீர்வள முள்ளது; தங்குதற்கு நிழலுள்ள இடங்களுள்ளன. புகலடைந்து அச்சமற்று வாழ்வதற்குத் தகுதிமிக்க தானமாகச் சிராமலைச் சாரலுள்ளது. (இங்ஙனம் யாவும் நிறைந்திருக்கவும்) இங்கு உள்ள ஈசனைச் சாகுந்துணையும் வணங்கி நற்கதி எய்தும் பாக்கியமற்ற பாவியர் சிலர், சதா பஞ்சத்தால் நலிவுற்றுப் பிச்சையெடுத்துத் திரிகின்றனர்; என்னே!) எ-று.

கு-ரை: நீர்வளம் கூறப்பட்டதனால் உணவு மிகுதியும், நிழல் என்பதனால் தங்கற்குரிய மனைகளும் கூறப்பட்டனவாம். 'பஞ்சப்பொழுது பகுத்துண்பான்' (சிறுபஞ்ச. 79.) என்பதனால், பஞ்சம் என்பது பழஞ்சொல்லாதல் அறிக.

**பாவிய ராக புரத்திற்பட் டார்பசுஞ் சந்தனத்தின்**
**நாவி யராவு சிராமலை யானையு நல்லனென்னேம்**
**ஓவிய ராலு மெழுதப் படாவுரு வத்தசுரர்**
**தேவிய ராவியுங் கொண்டதன் றேவவன் செஞ்சரமே. 43**

(பாவியராக புரத்திற்பட்டார் பசுஞ்சந்தனத்தி னுவியராவு சிராமலையானையு நல்லனென்னெ மொவியராலு மெழுதப் படா வுருவத்தசுரர் தெவிய ராவியுங் கொண்டதன்றெ வவன் செஞ்சரமெ.)

**பொ-ரை;-** சிவபிரானது அம்பினால் பட்டொழிந்த திரிபுராதியர், அவ்வாறு அழிதற்கேற்ற பாவம் செய்தவராகுக. (ஒருபாவமும் அறியாத) ஓவியர்களாலும் எழுதற்கரிய உருவழகினரான அவர் தேவியரின் ஆவிகளையும் அந்த அம்பு கொண்டுசென்றது தகுமோ? (இவ்வாறு நல்லர் தீயர் என்ற எல்லாரையும் ஒருசேர அழித்த சிராமலையானது செயலில் குற்றமுள்ளதனால்) அவனையும் நல்லவன் என்று நாம் கூற ஒருப்படோம் எ-று.

கு-ரை:- புரம் - திரிபுரம்; பசுமையான சந்தன மரங்களில் கத்தூரிமான்கள் உரசுதலால், மணமிகப் பெறும் சிராமலை என்க. அராவுதல் - உரசுதல்; 'பொருப்பராவி இழிபுனல்' (தேவாரம்) என்ப.

சரங்கலந் தோரைப் புணர்விக்க வெய்தவென் றூர்க்கணவன்
சிரங்கலந் தோடெரி சேர்கின்ற வாறென் சிராமலையாய்
இரங்கலந் தோவிலை யால்வினை யேற்கென் றிரதிமண்மேற்
கரங்கலந் தோலிடக் கண்டதன் றேநின்றன் கண்மலரே. 44

(சரங்கலந்தொரைப் புணர்விக்க வெயார்மென்றூர்க் கணவன்
னிரங்கலந்தொடெரி செர்கின்றவாறென் சிராமலையா யிரங்
கலந்தொ விலையால் வினைபெற்கென் றிரதி மண்மெற்கரங்
கலந் தொலிடக் கண்டதன்றெ நின்றன் கண்மலரெ.)

பொ-ரை:- *சிராமலைப் பெருமானே! "மணந்த காதலரைச் சேர்ப்பிக்க வேண்டித் தன் மலர்ச்சரத்தால் எய்த மெல்லிய மாலையணிந்த என் கணவனது தலையில் அக்கினி பரவிச்சேரும்படி புரிந்ததற்கு அவன்செய்த தீமை என்னே? தீவினையேனை என்னை நோக்கியேனும், அந்தோ உமக்கு இரக்கம் இல்லையாயிற்றே" என்று தன் கைகளைக் கூப்பிய வண்ணம் இரதி தேவி ஓலமிட நும் கண்மலர் செய்ததன்றோ (இஃது என்னே!) எ-று.*

கு-ரை:- *ஓலிடுதல் - ஓலமிடுதல்; அபயக் குரலிடுதல். உன்னைத் தேவியுடன் கூட்டுதற்கு எய்த என் கணவனது சரமலரினும், அவனை என்னினின்றும் பெரும்பிரிவு செய்த உம் கண்மலர் மிகக் கொடியதாம், இக்கொடுமையைக் கேட்பாரார் என்றபடி.*

கண்மலர் நீலங் கனிவாய் பவளங் கருங்குழல்கார்
எண்மலர் மூக்கிளங் கொங்கைகள் கோங்கிடைமின்வடிவென்
னுண்மலராசையி னெப்புடைத் தல்குலொண் பொன்மலையாள்
தண்மலர் சேர்தளிச் சங்கிடு வாளொரு பெண்கொடிக்கே. 45

(கண்மலர் நிலங் கனிவாய் பவழம் கருங்குழல் கார் எண்மலர்
முக் கிளங்கொங்கைகள் கொங் கிடையென் வடிவென்னுண்
மலராசையி னொப்புடைத் தல்கிலொண் பொன்மலையான்
றண்மலர்சேர் தளிச்சங்கிடுவா ளொரு பெண்கொடிக்கெய்.)

இது, தளிச்சேரிப் பெண்டுகளுள் ஒருத்தியின் பேரழகில் ஈடுபட்ட காமுகன் கூற்று.

**பொ-ரை:-** ஒளிமிக்க பொன்மலை ஈசனது தண்ணிய மலர் நிறைந்த திருக்கோயிலில் சங்கிடுவாளான ஒப்பற்ற இப் பெண்கொடிக்கு, கண்கள் நீலமலர்போலும்; கனிவுள்ள வாய் பவளம்போலும்; குழல் மேகம்போலும்; மூக்கு எட்செடியின் மலர்போலும்; இளங் கொங்கைகள் கோங்குமலர்போலும்; இடை மின்னுப் போலும்; அல்குல், என் உள்ளத்தில் மலர்ந்த ஆசையைப்போல ஒத்தமைந்துள்ளது எ-று.

கு-ரை:- எண் - எள்ளுச்செடி. உள் மலர் ஆசை - மனத்து விரிந்த காதல்; "ஆசையல்குல் பெரியாரை" என்றார் பிறரும் (பெருந்தொகை - 35). பொன்மலை - சிராப்பள்ளி; தளி - கோயில். தளிச்சங்கிடுதல் என்றது, திருப்பணி தொடங்குதற்கு அறிகுறியாக வைகறையிற் கோயிலில் சங்கமூதுதலை. இஃது ஏனைய பணிகட்கும் உபலக்கணம்; இங்ஙனம் கோயிற் பணிபுரியும் பெண்டிரைத் தளிச்சேரிப் பெண்டுகள், தளியிலார் எனவும், உருத்திர கணிகையர் எனவும் வழங்குவர்.

இனித் தளிச்சங்கிடுவாள் என்பது சைவ தவப்பெண் என்று கொண்டு, அவளுறுப்பழகில் ஈடுபட்ட ஒருவனது கூற்று எனினுமாம். இவளைக்கண்டு பிறர் காமுறுதலை,

கலம்பக உறுப்பான பிச்சியாரில் காணலாம்; ஆண்பாலா ரினும் இவர் போன்ற தவசியர் உண்டு. 'செங்கற்பொடிக் கூறை வெண்பற் றவத்தவர், தங்கள் திருக்கோயில் சங்கிடு வான் போதந்தார்' (திருப்பாவை) என்ற ஆண்டாள் திருவாக்கால் இதனை அறிக. இத்தவத்தவரைச் சைவத் தவசியராகவேகொண்டு முன்னோர் உரைத்த வியாக்யான மும் இங்கு அறியத்தகும்.

**பெண்கொடி யாரிற் பிறர்கொடி யாரில்லை பேரிடவத்**
**திண்கொடி யாரைச் சிராமலை யாரைத் திருநுதன்மேற்**
**கண்கொடி யாரைக் கனவினிற் கண்டு கலைகொடுத்த**
**ஒண்கொடி யாரை யுணர்வழிந் தாரென் றுரைப்பர்களே. 46**

(பெண்கொடியாரிற் பிறர்கொடியா ரில்லை பெரிடவத் திண் கொடியாரைச் சிராமலையாரைத் திருநுதன்மெற் கண்கொடி யாரைக் கனவினிற் கண்டு கலைகொடுத்த வொண்கொடி யாரை யுணர்வழிந்தாரென் றுரைப்பர்களெய்.)

இது கனவுநிலை உரைத்தல்.

**பொ-ரை:-** பெரிய இடபம் எழுதிய திண்ணிய கொடி உடையவரும், சிராமலைவாணரும், கொடிய நெற்றிக்கண் உடையவருமான ஈசனைக் கனவிடையே காணப்பெற்றுத் தன்கலையை இழந்த ஒள்ளிய இப்பூங் கொடி போல்வாளை, (இவளது உண்மைநிலை உணராத பிறபெண்டிர்) உணர்விழந்தவள் என்று கூறுகின்றனர் எ-று.

**கள்ளும் முருகுந் தருமல ரானுட் கசிந்திறைஞ்சி
உள்ளும் புறமு மொருக்கவல் லார்கட் குலகறியக்
கொள்ளு மடிமை கொடுக்குந் துறக்கம் பிறப்பறுக்கும்
தெள்ளு மருவிச் சிராமலை மேய சிவக்கொழுந்தே. 47**

(கள்ளும் முருகுந்தரு மலரான் மிக்க சந்திறைஞ்சி யுள்ளும் புறமும் மொருக்கவல்லார்கட் குலகறியக் கொள்ளும் மடிமை கொடுக்குந் துறக்கம் பிறப்பறுக்குந் தெள்ளும் மருவிச் சிராமலை மெய சிவக்கொழுந்தெ.)

**பொ-ரை:-** *தெள்ளிய அருவியுடைய சிராமலைப் பெருமான், தேனும் மணமும் தரும் நாண்மலர்களிட்டு, மனக்கனிவுடன் தம் உள்ளும் புறமும் ஒருமுகப்படுத்தி வழிபடவல்லவர்கட்கு உலகோர் அறியுமாறு. தன் மெய்யடியாருடன் சேர்ந்துவாழும்படி அடிமைத்திறனை அளிக்கும்; வீட்டினைக் கொடுத்தருளும்; பிறவியையும் ஒழிக்கும் எ-று.*

**கு-ரை:-** *கள் - தேன்; மலரான் இறைஞ்சி - புஷ்பாஞ்சலிசெய்து; ஒருக்குதல் - ஒருமுகப்படுத்துதல், ஒடுக்குதல். துறக்கம் - வீடு.*

**கொழுந்தார் துழாய்முடிக் கொற்றக் கருடக் கொடித்தெய்வ
செழுந்தா மரையிற் றிசைமுகத் தாதியுஞ் சேவடிக்கீழ்த்[ழும்
தொழுந்தா ரியர்தந் துணிவைப் பணிப்பச் சுடர்ப்பிழம்பாய்
எழுந்தான் சிராமலைக் கேறநம் பாவ மிழிந்தனவே. 48**

(கொழுந்தார் துழாய்முடிக் கொற்ற கருடக்கொடித்தெவுஞ் செழுந்தாமரையிற் றிசைமுகத்தா தியுஞ் செவடிக்கிழ்த் தொழுந்தாரியர்தந் துணிவைப் பணியச் சுடர்ப்பிழம் பாயெழுந்தான் சிராமலைக்கெற நம் பாவம் மிழிந்தனவெ.)

**பொ-ரை:-** துழாய்க் கொழுந்தினைச் சூடிய முடியினையும், வெற்றிதங்கிய கருடக்கொடியினையு முடைய தேவனான திருமாலும், செழித்த தாமரையில் தோன்றிய திசைமுகனான முன்னோனும் நின் சேவடிக்கீழ் தொழு முறை உடையராய் நின்று, தாம்கொண்ட சூளுறவுகளை விண்ணப்பம் செய்ய, அக்கினிப்பிழம்பாய் எழுந்து வளர்ந்த ஈசனது சிராமலைக்கண் அவனைத் தொழுதற்கு ஏறினவளவில் நம் பாவமெல்லாம் இழிந்துவிட்டன எ-று.

கு-ரை:- தொழுந் தாரியர் - தொழுதற்குரிய முறைமையின் நிற்போர்; தாரி - நெறி, முறைமை; 'இதுதானுந் தாரியதன்று' என்றார் கம்பரும் (இராமா. இரணிய. 118). துணிவு - அடிமுடிகளைக்காணும் தம் முடிவு.

**இழியுந் நரகமு மேறுந் துறக்கமு மிவ்விரண்டும்**
**பழியுந் புகழுந் தரவந் தனவினைப் பற்றறுத்துக்**
**கழியும் முடம்பு கழித்தவர் காணுங் கழலன்கண்டீர்**
**பொழியுங் கருமுகில் போர்க்குந் திருமலைப் புண்ணியனே. 49**

(இழியுந் நரகமு மெறுந் துறக்கமு மிவ்விரண்டும் பழியும் புகழுந் தர வந்தன [வினை]ப்பற்றறுத்துக் கழியும் முடம்பு கழிந்தவர் காணும் கழலன் கண்டிர் பொழியும் கருமுகில் பொர்க்குந்திருமலைப் புண்ணியனெய்.)

**பொ-ரை:-** இழிதற்குரிய நரகமும் ஏறுதற்குரிய துறக்கமும் ஆகிய இவ்விருகதிகளும் முறையே பழி புகழ்கள் காரணமாக வந்தனவாம். நீரைச் சொரிகின்ற கார்மேகங்களைப் போர்க்கும் திருமலையில் கோயில்

கொண்ட புண்ணிய மூர்த்தியான ஈசன், இயற்கையிற் கழியும் சரீரத்தில் உள்ள பற்றறுத்து அதனைக் கழித்த அடியார்கள் காணற்குரிய திருவடிகளை உடையவன். (நற்கதிபெற அவ்வடிகளிற் சரண்புகுங்கள்) எ-று.

கு-ரை:- இருள்சேர் இருவினைகளும், பழிபுகழ்கள் காரணமாக நரகமும் துறக்கமுந் தருவன என்றும், பொன்விலங்கும் இருப்பு விலங்கும் போன்ற அவை இரண்டினையுங்கழித்தவரே ஈசன்கழல் காண்பதற்குரியார் என்றும் அறிக.

**புண்ணியன் வேத முதல்வன் புரமூன் றெரித்தவன்று**
**திண்ணியன் தேவர் பிரானென நின்றான் சிராமலைவாய்க்**
**கண்ணியன் றண்ணந் தழையன் கனைபொற் கழலனம்பாற்**
**றண்ணிய னின்றும் வருமன்று போன தனிவில்லியே. 50**

(புண்ணியன் வெதமுதல்வன் புரமூன்றெரித்தவன்று திண்ணியன் றெவர்பிரானென்ன நின்றான் சிராமலைவாய்க் கண்ணியன் றண்ணந் தழையன் கனைபொற்கழல னம்பாற் றண்ணியன் இன்றும் வரும் மன்று பொன தனிவில்லியெ.)

இது, தலைவன் கொணர்ந்த தழையுடையினை ஏற்பிக்கலுற்ற தோழி, தலைவியிடம் கூறியது.

**பொ-ரை:-** புண்ணிய மூர்த்தியும், வேத முதல்வனும், திரிபுரங்களையெரித்த அந்நாளில் மனத்திட்ப முடைய னானவனும் ஆகிய தேவேசனது சிராமலையிடத்து, நீ சூடுதற்குக் கண்ணியும் உடுத்தற்குத் தழையும் ஏந்தி நம்பால் தண்ணளியுடையவனாய் அன்று வந்து

சென்ற பொற்கழலணிந்த வில்வீரன், இன்றும் வருகின்றான் (நாம் அவன் திறத்தில் செய்வதென்னோ) எ-று.

கு-ரை:- புண்ணியமும், கருணையும் மிக்க மூர்த்தியாயினும், திரிபுரம் எரித்தகாலையில் அவ்விரண்டும் இல்லாத வன்கண்மை யுடையனாயினான் என்பது முன்னிரண்டடிகளின் கருத்து.

**வில்லிபின் செல்லமுன் செல்லா வரிவையு மென்கிளிபோல்**
**சொல்லிபின் செல்லமுன் செல்லா விடலையுஞ் சொல்லிமவான்**
**வல்லிபின் செல்லமுன் செல்லா திடங்கொண்ட மாதவர்போல்**
**எல்லிபின் செல்லமுன் செல்லார் சிராப்பள்ளி யெய்துவரே. 51**

(வில்லி பின்செல்ல முன்செல்லா வரிவையு மென்கிளிப்போல்
சொல்லி பின்செல்ல முன்செல்லா விடலையுட் சொல்லிம்
மான் வல்லிபின் செல்ல முன்செல்லா திடங்கொண்ட
மாதவர்போ லெல்லிபின்செல்ல முன்செல்லரர் சிராப்பள்ளி
யெய்துவரெய்.)

இஃது, உடன்போக்கில் சுரத்திடைக் கண்டோர் கூறியது.

**பொ-ரை:-** வில்லாளியான தலைமகன் தன் பின்புறம்வர முன்னிடமாகச் செல்லாத தலைவியும், கிளிமொழியாளான தலைவி தன் பின்புறம்வர முன்னிடமாகச்செல்லாத தலைவனும், உமாதேவி தன் பின்புறமாகச் செல்லாதவாறு தன் இடப்பக்கங்கொண்ட ஈசனைப்போல, பகற்பொழுது பிற்படும்படி செல்லாமல் முன்னதாகவே சிராப்பள்ளியை எய்துவர் எ-று.

கு-ரை:- தலைவனும் தலைவியும் பிரியாமல் ஒருவரை ஒருவர், உமாபதிபோல், இணைந்தவண்ணம் இரவுவருதற்கு முன்பே தலைநகரை எய்துவர் என்பது கருத்து. மாது அவர் என்று பிரித்துச் சிலேடை பெறும்படியும் சொன்னயம் அமைந்துள்ளமை அறியத்தக்கது.

**எய்துவ ராயமுந் தாமு மிரும்பொழி லென்னைமையல்**
**செய்தவர் வாழ்வும் சிராமலை யென்பது சென்றுகண்டால்**
**வெய்தவர் மான்விழி மென்முலை தண்ணிய வம்முலைக்கீழ்**
**ஐதவர் நுண்ணிடை யல்குலுஞ் சால வளவுடைத்தே. 52**

(எய்துவ ராயமுந் தாமும் இரும்பொழிலென்னை மையல்செய் தவர் வாழ்வுஞ் சிராமலையென்பது சென்று கண்டால் மெய் தவர்மான் விழிமென்முலைதண்ணியவம் முலைக்கி ழைய்தவர் நுண்ணிடையல்கிலுஞ் சால வளவுடைத்தெய்.)

இது, பிற்றைஞான்றும் ஆயத்திடைச் சென்று தலைவியைக் காணவிரும்பிய தலைவன் கூற்று.

**பொ-ரை:-** என்னைக் காதல்மயக்க முறும்படி செய்த நங்கை—இதுபொழுது ஆயத்தாரும் தாமும் விளையாட்டிடமான பெரிய பொழிலை அடைவார்கள்; அவர்கள் வாழும் ஊர் சிராமலையாகும்; நாம் அப்பொழிலிற்சென்று ஆயத்திடையே அவரைக் குறிப்பிட்டுக் காணுமிடத்து, அவர் மான்போலும் கண்கள் கடுமை உடையன; கொங்கைகள் தண்மை உடையன; அவற்றின் கீழமைந்த சிற்றிடையும் அல்குலும் பெரிதும் அளவொத்து அமைந்துள்ளனவாம் எ-று.

கு-ரை:- வெய்து - விரும்பத்தக்கது எனினுமாம். ஐது - வியப்புடையது; உறுப்பின் சிறப்புடைக் குறிகளால் தலைவியை அறிந்துகொள்ளுதல் எளிது என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியவாறு.

**உடைத்தே வருதுன்ப வெம்பகை நீக்கி யுலகளிக்கும்**
**சடைத்தே வான்முடித் தேவருந் தாடொழத் தானவரைப்**
**படைத்தே கொடுத்த பரமன் சிராமலைப் பாடிருந்துங்**
**கடைத்தே வரைத்தொழு மோவினை யேனென் கரதலமே. 53**

(உடைத்தெய்வரு துன்ப வெம்பகை நிக்கி உலகளிக்குஞ்
சடைத்தெவர் [மு]டித்தெவருந் தாடொழத் தானவரைப்
படைத்தெய் கெடுத்த பரமன் சிராமலைப்பாடிருந்துங்
கடைத்தெவனைத் தொழுமொ வினையெனென் கரதலமெய்.)

பொ-ரை;- நன்மைகளையெல்லாம் குலைக்கவல்ல துன்பமாகிய கொடிய பகையை நீக்கி, உலகத்தைக் காத்தருளும் சடாபாரமுடைய தெய்வமாகிய அரனும், தன் திருவடிகளைத் தொழுதற்காகவே மணிமுடியணிந்த தேவர்களைப் படைத்துக் கொடுத்தவனுமான பரமனுடைய சிராமலையின் பக்கத்திருந்தும், என் கரதலங்கள், நின்கோயிற் கடையில் உள்ள பரிவார தேவதைகளைத் தலைவராகக்கொண்டு தொழக்கடவனவோ எ-று.

கு-ரை:- உடைத்தேவரும்-எல்லாவற்றையும் குலைத்து வரும்; சடைத்தேவாகிய அரன் என்க. தன் தாள் தொழற்காகவே தேவரைப் படைத்துக்கொடுத்த பரமன். கடைத்தேவர் - கோயிற்புறமமைந்த பரிவார தேவதைகள்.

**கரம்பற் றியவில்லி கைப்பற் றியவல்லி காலலைக்குஞ்**
**சுரம்பற் றியசெழு மம்பொற் சுடர்க்கம லத்தயன்றன்**
**சிரம்பற் றியமழு வாளிதண் சாரற் சிராமலைசேர்**
**வரம்பற் றியபெரி யோரிற்சென் றேகினர் வாழ்பதியே. 54**

(கரம்பற்றிய வில்லி கைபற்றிய வல்லி காலலைக்குஞ் சுரம் பற்றிய [செழுமம்பொன்] சுடர்க்கமலத்தயன்றன் சிரம் [ப]ற்றிய மழுவாளிதன் சாரற்சிராமலைசெர் வரம்பற்றிய பெரியொரிற் சென்றெகின வாழ்பதியெ.)

இஃது, உடன்போக்கில் தலைவியுடன் தலைவன் தன் பதியடைந்தமை கண்டோர், செவிலிக்குக் கூறியது.

**பொ-ரை:-** கையிலேந்திய வில்லை உடைய தலைவனும் அவனது கரங்களைப் பற்றிக்கொண்டு செல்லும் வல்லிபோல்வாளும், செழித்த செம்பொன்னொளியுள்ள தாமரையை ஆசனமாகக் கொண்ட பிரமதேவனது தலையைக் கொய்து கைப்பற்றிய ஈசனது சிராமலைச் சாரலைச் சேரும் பாக்கியம்பெற்ற பெரியோர்போலத் தம்பதியைச் சென்றடைந்தனர் எ-று.

கு-ரை:- சுரம்பற்றிய சாரல் என இயைக்க. முல்லையும் குறிஞ்சியும் திரிந்த பாலைத் தொடர்புடையதாதலால், சுரம்பற்றிய சாரல் எனப்பட்டது.

**பதியிலம் நாடிலம் பைம்பொற் குடைபெறப் பண்டுசெய்த**
**விதியிலம்.........இலம்வியன் கங்கை யென்னு**
**நதியிலங் குஞ்சடை நாதன் சிராமலை நண்ணவெண்ணும்**
**மதியிலம் வாழ்வா னிருத்துமென் றேநம் மனக்கருத்தே. 55**

(பதியிலந் நாடிலம் பைம்பொற் குடைபெறப் பண்டுசெய்த
விதியிலம் .... .... இலம் வியன்கங்கை யென்னு[று ந]தியி
லங்குஞ் சடைநாதன் சிராமலை நண்ணவெண்ணும் மதி
யிலம் வாழ்வா னிருத்துமென்னெ நம் மனக்கருத்தெய்.)

**பொ-ரை;-** *தலைமை நகரை உடையோமல்லோம்; நாடுடையோ மல்லோம்; வெண்பொற் குடைபெற முன் செய்த பாக்கியமில்லோம்;... (இவ்வில்லாமைக்கெல்லாம் காரணமாக) பெரிய கங்காநதி தங்கும் சடாபாரத்தை உடைய ஈசனது சிராமலையை நண்ணித் தொழ வெண்ணும் ஞானம் இல்லாதவரானோம்; உலகில் வாழும்பொருட்டு உள்ளோமாகிய நம் மனக்கருத்து என்னோ எ-று.*

கு-ரை:- இவ்வாசிரியரது காலத்துச் சோணாட்டு அரசுநிலை சீர்கேடு அடைந்திருந்ததென்பதை இப்பாடல் குறிப்பிடுவதுபோலத் தோற்றுகின்றது.

(மனக்கருத்தாகிய .... ரவலை கண்செ .... பற்றின் .... க்
கருத்து .... .... .... இருந்தென் .... .... .... கெல்லாம்
.... .... .... கொட்டிற்றனைக்கு .... .... சிராமலையெ.) 56

(மலையாள் மடந்தையொர் பாகத்தன் மாகத்து மானதஞ்
சிலையா லழிவித்தநாதன் சிராமலை தெவர் .... .... .... ....
வழுமலையா யொருவர் .... .... குயிர்க .... .... மிலையா
.... .... ழிருணர்ந்தெமை விறைவி யியங்குவரெய்.) 57

---

56, 57-ம் பாட்டுக்கள் இடையிடையே எழுத்துக்கள் விடப்பட்டும், பிழைபட்டும் உள்ளதனால் பொருள் புலனாகவில்லை.

**இயங்கிய காலு நிலனு மெரியு மிருவிசும்பும்
மயங்கிய நீரு மறையும் பிறவு மருவியறந்
தயங்கிய சோதியுந் தானுந் திருமலைத் தத்துவன்றாள்
முயங்கிய சிந்தையி னார்களெந் நாளு முடிவிலரே. 58**

(இயங்கிய காலு நிலனும் எரியு மிருவிசும்பும் மயங்கிய நிரும் மறையும் பிறவு மருவியரந் தயங்கிய சொதியுந் தானுந் திருமலைத் தத்துவன்றாள் முயங்கிய சிந்தையினார்க ளெந் நாளு முடிவிலரெ.)

பொ-ரை:- *வாயு, பூமி, தேயு, ஆகாசம், நீர்களும், வேதமும், விளங்கும் சோதிகளும், பிறவும் தானுகவே பொருந்திய, திருமலையான சிராமலையீசனது திருவடிகளை அநுபவிக்கும் சிந்தை உடையவர்கள் எக்காலத்தும் அழிவற்றவர்களாவர் எ-று,*

கு-ரை:- *'மறையும்' என்பதனுல் வேத வேள்விக்குரிய இயமானனையும், 'சோதியும்' என்பதனுல் சந்திர சூரியர் களையும் கொள்க. எனவே, சிவபிரான் அட்டமூர்த்தங்களு மாயுள்ள நிலை கூறப்பட்டதாயிற்று.*

**முடியரை சாளுமுந் நீரகன் ஞாலந்தன் முன்னணைந்த
அடியரை யாள விடுவான் சிராமலை யைநிலவிற்
பிடியரை சாளி பிடிப்ப நடுக்குறும் பேய்ப்புனத்தே
குடியரை சாளுங் குறவருஞ் சாலக் கொடுமையரே. 59**

(முடியரைசாளு முந்நி ரகன்முாலந் தன்முனணிந்த வடியரை யாள் விடுவான் சிராமலை ஐயநில[யி]ற் பிடியரைசாளீ பிடிப்ப நடுக்குறும் பெய் புனத்தெய் குடியரைசாளு[ங்] குறவருஞ் சாலக் கொடுமெயரெ.)

இஃது, இரவுக்குறி வரும் தலைவனைத் தோழி வரவு விலக்கியது.

**பொ-ரை:-** முடிவேந்தர்கள் ஆட்சிபுரிதற்கு உரிய கடல்சூழ்ந்த அகன்ற இப்பூவுலகை, தன்முன் அணைந்து தொழும் அடியார்கள் ஆளும்படி செய்விப்பவனை ஈசனது சிராமலையில், அழகிய நிலவினிலே பிடியானையை ஆளியரசு பாய்ந்து பிடித்தலால் நடுங்கிக் கதறு கின்ற பேய்திரிகின்ற புனத்தில், தங்கள் குடிக்கு அரசரா யிருந்து ஆளும் மலைவாணரான குறவர்களும் மிக்க கொடியோரானவர்கள் எ-று.

கு-ரை:- குறவரும் கொடுமையர் என்ற உம்மை ஆளியரசின் கொடுமையாகிய இறந்தது தழீஇயிற்று. எனவே, கொடிய விலங்குகளும், கொடியோரும் உண்மை யால் நீவிர் இரவு வருதல் ஏதம்பயக்கும் என்றபடி.

**கொடும்பற் றுயங்கிக் குழிகண் ணிடுங்கிக் குரனடுங்கி**
**இடும்பைக் கொதுங்கி யிருமற் பகைகொல்ல வில்லிபட்ட**
**நெடும்பக் கரையா நிலையா வுடலை நிலையுமென்னுர்**
**திடும்பற் கலுழிச் சிராமலை யாளியைச் சேர்ந்தவரே. 60**

(கொடும்பற் றுயங்கிக் குழிகண் ணிடுங்கிக் குரனடுங்கி இடும் பைக் கொதுங்கி யிருமற் பகைகொல்ல [இ]ல்லிபட்ட நெடும்பக்கலை[ய] நிலையா உடலை நிலையுமென்னுர் திடும் பற்கலுழிச் சிராமலையாளியைச் செர்ந்தவரெய்.)

**பொ-ரை:-** கரைகடந்த நீர்ப்பெருக்கை உடைய சிராமலையாண்டவனைச் சார்ந்த அடியார்கள், வளைந்த பற்கள் அசைந்துவிழவும்; குழிந்த கண்கள் இடுங்கவும்,

தங்கள் துன்பம்நீங்க வெவ்வேறிடங்களில் ஒதுங்கவும், இருமலாகிய நோய் கொல்லவும், பொத்தல்பட்ட பெருந் தோற்பைபோல நிலையாது கழியும் உடம்பினை நிலைத்ததுபோலக் கருதி மதியார் எ-று.

கு-ரை:- துயங்குதல் - அசைந்து விழுதல். இல்லி - பொள்ளல்; பக்கரை - தோற்பை. திடும்பல் கலுழி - கரை கடந்த நீர்ப்பெருக்கு; திடும்பல் - அடங்காத்தனம். திடுமல் என்பது வழக்கு (திசைச்சொல்).

**ஆளியைச் சேர்ந்த வகலத் தவனுக் கிளையவம்மென்**
**றோளியைச் சேர்ந்த பிரான்றன் சிராமலை துன்னலர்போல்**
**மீளியைச் சேர்ந்தவஞ் செய்தனை யேவினை யேன்பயந்த**
**வாளியைச் சேர்ந்த சிலைபோ லுருவத்து வாணுதலே. 61**

(ஆளியைச் செர்ந்த வகலத்தவனுக் கிளையவம்மென்றொளி யைச் செர்ந்த பிரான்றன் [றன்] சிராமலை துன்னவர்பொல் மிளியைச் செர்நாதனம் செய்தனையெய் வினையென் பயந்த வாளியைச் செர்[ந்]த சிலைபொல் லுருவத்து [வாணுதலெ]).

இது, சுரத்திடை உடன்போகிய தன்மகட்குச் செவிலி இரங்கியது.

பொ-ரை:- சிங்கமுகத்தைக்கொண்ட மார்பினை உடைய நரசிங்கமூர்த்திக்கு இளைய தங்கையும், அழகிய மெல்லிய தோளினை உடையவளுமான உமாதேவியைத் தன் இடப்பாகத்தணைந்த ஈசனது சிராமலையை அடைந் துய்யாதவர்போல, அம்பினை இட்டுவைத்த விற்போன்ற புருவமுள்ள உருவத்தினையுடைய, தீவினையேன் பெற்ற மகளே! வலியோனொருவனைச் சேர்ந்து கேடு விளைத் தனையே எ-று.

கு-ரை:- அவஞ்செய்தலாவது: நாடுநகருமறிய மணம் செய்துகொண்டு குலப்பெருமையை விளக்காமல் களவொழுக்கம் புரிந்தது; 'அலஞ்செய்தனையே' என்று கொள்வதாயின் துன்பத்தில் ஆழ்த்தினையே என்க. மீளி என்றது பாலைநிலத்துத் தலைவன் கொண்டு தலைக்கழிதல்பற்றி; வாளியைச் சேர்ந்த சிலை-கண்களைக்கொண்ட புருவத்துக்கு உவமை. கண்களைக்கொண்ட நுதலெனினும் ஆம்; 'வில்லொக்கும் நுதலென்றாலும்' என்றார் கம்பரும்.

**நுதன்மிசைச்செங்கண்மலர்ந்தணங்கோடயின்மன்மதவேள்**
**மதனுகப் பொங்கழற் சிந்துவித் தான்வண் சிராமலைவெற்**
**பிதன்மிசைச் சாரலில் யாமா டிடமிள வண்டுறங்கும்**
**புதன்மிசைத் தோன்றியுங் காந்தளும் பூக்கும் பொழிலிடமே.**

(நுதன்மிசைச் செங்கண்மலர்ந்த[ணங்]கொடையின் மன்மத வெள் மதனுகட்பொந் தழற்சிந்துவித்தான் வண்சிராமலை வெற் பிதன்மிசை சாரலில் யாமாடிட மிள வண்டுறங்கும் புதனமிசைந் தொன்றியுங் காந்தளும் .... .... .... பூக்கும் பொழிலிடமெ.)

இது, தோழி தலைவற்குப் பகற்குறியிடம் கூறியது.

பொ-ரை;- இரதி தேவியுடன் வேல்தாங்கிய மன்மதனது செருக்கொழிய, தன் நெற்றித் தீக்கண் மலர்ந்து அக்கினியைச்சொரிந்த ஈசனது வளம்பொருந்திய சிராமலையாகிய இதன்மேலிடமாக அமைந்த சாரலில் யாங்கள் விளையாடும் தலமானது, இளவண்டுகள் கள் மயக்கத்தால் உறங்கும் புதரின்மேல், தோன்றியும் காந்தளும் மலர்கின்ற உய்யானவனமாம் எ-று.

கு-ரை:- ஆகவே, யாங்கள் உள்ள அவ்விடம் நீவிர் வருவீராக என்றவாறு. தோன்றியுங் காந்தளும் பகற் பூக்கும் மரங்களாதலின் பகற்குறி குறிப்பிட்டபடி. 'இதண்மிசை' என்று படிப்பதாயின் 'பரணுக்கு மேலிட மான' என்று பொருள்கொள்க.

**பொழிலுடை யார்பணி பொன்னடி வானவர் முன்முடிசேர்**
**கழலுடை யானது காமர் சிராமலைக் காரணைய**
**குழலுடை யாணசை வாரல்குறவர்கொல் யானைக் கொள்ளித்**
**தழலுடை யாநெறி யும்புலி யோர்க்குந் தயங்கிருளே. 63**

(பொழிலுடையார் பணி பொன்னடி வானவர்முன் முடிசேர் கழலுடையானது காமர் சிராமலைக் காரணைய குழலுடை யாணசையராற் குறவர் கொல்[லி]யானைக் கொள்ளித் தழலுடையா [நெறி]யம்பொறி பொர்க்குந் தயங்கிருளெ.)

இஃது, இரவுக்குறி வருந் தலைவனைத் தோழி 'வாரல்' என விலக்கல்.

**பொ-ரை:-** இம்மண்ணுலகத்து மக்கள் வணங்கும் திருவடிகள், தேவர்களின் முடிமுன்பினைச் சேரும், கழலுடைய ஈசனது அழகிய சிராமலையில், மலைவாண ரான குறவர்கள் துன்பம்விளைக்கும் யானையைத் தேட வேண்டி ஏந்திய கைக்கொள்ளியின் சுவாலை இருளைப் போக்கும் வலியின்மையால் மயக்கந்தரும் வழியை உடையதும், புலிகள் அந்த யானைமேற் பாய அமயம் பார்த்து நிற்பதுமான பேரிருளிடையே, மேகம்போலும் கூந்தலுடைய தலைவியின் வேட்கை காரணமாக நீ வாராதேகொள் எ-று.

கு-ரை :- பொழில் - நாவலந் தீவு; 'கொள்ளிக்கும் விள்ளாத கூரிருள்' என்றார் பிறரும் (நளவெண்பா).

**இருளின் படல மிவையில்லை கார்முகி லில்லையில்லை**
**மருளு மயர்வும் பெரிதுடை யாரில்லை வல்லிருளுய்**
**தெருளு மனத்தார்க் கருளும் பிரான்றன் சிராமலைபோற்**
**பொருளு மவிருமப் பொன்னகர் வீதி புகுந்தனரே. 64**

(இருளின் படலமிவை கார்முகிலில்லை. வென்னின்மருளும மயர்வும் பெரிதுடையாரி ல்லை வலவி . . ருளைத்தெரும் மனத்தார்க்கருளும் பிரான்றன் சிராமலைபொல் பொருளும் மவிரும் பொன்னகர் வீதி புகுந்தாரெய்.)

இஃது, உடன்போகிய தலைமகளுடன் தலைவன் நல்ல தோர் பொழுதில் தன் பதியையடைந்தமை கண்டோர் கூறியது.

**பொ-ரை:-** இருளின் செறிவு அங்கு இல்லை; சூற்கொண்ட கார்மேகம் இல்லை. ஐயந்திரிபுகள் மிக்குடையார் இல்லை; மனவிருளைவிளக்கும் நோயில்லை. தெளிந்தமனமுடைய ஞானியர்க்கு அருள்புரியும் ஈசனது சிராமலைபோலக் காட்சிக்குப் பொருள்களெல்லாம் விளக்கமாக உள்ளன. இந்நிலையில் தலைமகனும் தலைமகளும் செல்வமிக்க தம் நகரவீதியுட் புகுந்தனர் எ-று.

**வீதிவந் தாருடன் வேள்கலந் தான்விள ராவிவடன்**
**சோதி சேர்ந்தான் சிந்தை......ால்லி வுண்ணு...ரதருவின்**
**போதுசிந் தாமந்தி யாடுஞ் சிராமலைப் பொன்மலைபோல்**
**ஆதிசெந் தாமரை வண்ணங்கண் டாணங்க ளாயிழையே. 65**

(விதிவந்தாருடன் வெள்க ளந்தான் விளராலிவடன் சொதி
சேர்ந்தான் சிந்தை . . . ரல்லி . வுண்ணு . . ரத
ருவின் . . . சிந்தா மந்தியாடுஞ் சிராமலைப் பொ[ந்]மலை
பொலா[தி] செந்தாமரைவண்ணங் கண்டா[ன்]ங்கள்
இழையெ.)

இது, சிவபிரானது திருவுலாக்கண்ட பெண் ஒருத்தியின் விரகநிலை கூறியவாறு.

**பொ-ரை:-** விண்ணுட்டின் கற்பகமரத்து மலர்களை மந்திகள் சிந்திக்கொண்டு ஆடுகின்ற சிராமலையில், பொன் மலைபோலும் ஈசனது செந்தாமரை ஒத்த மேனி வண்ணத்தைக் கண்டபின் எங்கள் தலைவி—என்பது பின்னிரண்டிகளின் பொருள்—(இரண்டாமடி சிதைவுற்றிருப்பதால் பொருள்முடிபு புலப்படவில்லை.)

**இழையிடங் கொண்ட தடமுலை மீதிளங் கோமதலை**
**விழையிடங் கொண்டவெண் பாறுறி யூர்ந்தன்று மின்னிலவி**
**மழையிடங் கொண்ட சிராமலை யானை மறந்தவர்போல்**
**பிழையிடங் கொண்டது கொண்டவ னெஞ்சமென் பெண்**
**கொடிக்கே. 66**

(இழையிடங்கொண்ட தடமுரண் . . . . இளங்கொமதலை
விழையிடங் கொண்ட வெண் . ரறுறி . ர்தன்றி .
ன்னி . . . முவி மழையிடங்கொண்ட சிராமலையாரளி
மிறந்தவர்பொல் பிழையிடங்கண்டது . . . . . . .
. ள் பெண்கொடிக்கெ.)

இது, மகப்பேறுற்ற தலைவியின் ஈன்றணிமைநிலை கூறியது.

**பொ-ரை:-** அணிகளைப்பூண்ட பெருத்த கொங்கைகளின்மேல் இளமையுள்ள தன் செல்வக் குழந்தையானது, விருப்பம்கொண்ட வெண்பல் வெளிப்பட்டு மணக்கும்படி ஊர்ந்து விளையாடா நின்றது. மின்னல் வீசி மழை விரிந்துபெய்யும் சிராமலைப் பெருமானை மறந்தவர்கள்போல, என் தோழியான பெண்கொடிபால் அன்பு கொண்டவனுன தலைவன் நெஞ்சம் (தன் நுகர்ச்சிக்கு இடமில்லையாகையால்) அவளை மறக்கும்படியான குற்றத்தை மேற்கொண்டது எ-று.

கு-ரை:- ஊர்ந்தன்று - ஊர்ந்தது. பெண்கொடிக்கு; நான்காம் வேற்றுமை ஏழாவதன் பொருளில் வந்தது.

**கொடிக்கட் டியமணி மாளிகைத் தில்லையுட் கொற்றமன்னர்**
**முடிக்கட் டியமுகை சேர்கழல் மூவா யிரவர்முன்னின்**
**அடிக்கட் டியகழ லார்க்கநின் றம்பலத் தாடுமையர்**
**வடிக்கட் டியபொழில் வான்றேய் சிராமலை மாணிக்கமே. 67**

(கொடிக்கட்டிய மணிமாளிகைத் தில்லையுட் கொற்றமன்னர் முடிக்கட்டிய முகைசெர் கழல் மூவாயிரவர் முன்னின் றடிக் கட்டிய கழலார்க்க[நி]ன் றம்பலத்தாடுமைய்யெர் வடிக் கட்டிய பொழி[ல்] வான்றெய் சிராமலை மாணிக்கமெ.)

**பொ-ரை:-** தேனை மிகக்கொண்ட பொழிலுடைய விண்ணளாவிய சிராமலையில், மாணிக்கமணியாக விளங்கும் ஈசனே, மணிகள் கட்டிய கொடி மரங்களுடைய தில்லை நகரில் வெற்றி வேந்தர்களின் முடி சேர்த்தியதும், அருப்புத் தொழிலுடைய கழலணிந்ததுமான பாதத்தை உடைய அந்தணர் மூவாயிரவரின் முன்னின்று, திருவடி

களிற் கட்டிய கழல்கள் ஆர்க்கும்படி அம்பலத்தில் ஆடும் பெருமானுவர் எ-று.

குறை:- சிராமலை மாணிக்கமே, அம்பலத்தாடும் ஐயராவர் என முடிபுகொள்க. வடி - தேன்.

**வான்ருேய் சிராமலை வந்திறைஞ் சாதவர் மையல்வைகும்**
**தேன்ருேய் மொழியவர் செவ்வாய்நினைந்துவெள்வாய்புலர்ந்து**
**மீன்ருேய் கடலன்ன வேட்கைய ராகத்தம் மெய்ம்மைகுன்றி**
**ஊன்ருே யுடலிங் கொழித்துயிர் போக்கு முறைப்பினரே. 68**

(வான்ருேய் சிராமலை வந்திறஞ்சாதவர்மையல் வைகுந் தென்ருேய் ெ[ம]ாழியவர் செவ்வாய் நினைந்துவெள்வாய் புலர்ந்து மின்ருேய் கடலன்ன வெட்கையாகத்தம் மெ[ய்]ம்மை குன்றி ஊன்ருெயுட லிங்கொழித் துயிர்பொக்கும் உறை[ப்]பினரெ.)

**பொ-ரை:-** வானளாவிய சிராமலைக்கண் வந்து வணங்கப் பெருதவர் யாவரெனில், மயக்கந்தரும் தேன் போன்ற இனியமொழி உடைய மாதரின் செவ்வாயினைச் சுவைக்கும் நோக்குடன் தம் வெளுத்தவாய் உலறி மீன்கள்பொருந்திய கடல்போலும் பெருங்காமம் உடைய ராகவும், உடல்வலி குன்றியவராகவும், (இருந்து முடிவில்) நிணந்தங்கிய தம் சரீரத்தினின்று (வீணே) தம் உயிரைப் போக்கிக்கொள்ளும் தீவினையி னழுத்தம் உடையராவர் எ-று.

கு-ரை:- வந்திறைஞ்சாதவ ரெல்லாம், உறைப்பின ராவர் என இயையும். வெள்வாய் புலர்ந்தது, செவ்வாய் சுவைத்தற்குக் கிட்டாமையால் என்க. 'கடலன்ன

காமத்தராயினும்' என்றார் வள்ளுவரும். மெய்ம்மை — உடல்வலிமை;

**உறைப்புடைக் கூற்றை யுதைத்துயிர் மாற்றி யுலகறிய**
**மறைப்புடைமார்க்கண்டயற்கருள்செய்தவன்வாளெரிவாய்க்**
**கறைப்புடைப் பாம்புறை திங்கட் கரைக்கங்கை நீரலைக்கும்**
**சிறைப்புடைச் செஞ்சடை யானுறை கோயில் சிராப்பள்ளியே.**

(உறைப்புடைக் கூற்றை யுதைத்துயிர் மாற்றி யுலகறிய மறைப்பு[டை]ட மார்க்கண்டயற்கருள்செய்தவன வாெ[ன]ரி வாய்க் கறைப்புடைப் பாம்புறை திங்கட்கரைக் கங்கை நிரலைக்குஞ் சிறைப்புடைச் செஞ்சடையன் உறைகொயில் சிராப்பள்ளியெ.)

**பொ-ரை:-** வன்கண்மை கொண்ட யமனைத் தம் பாதங்களால் உதைத்து அவனுயிரைப் போக்கிப் பின்பு உலகறியும்படி வைதிகச் சார்புள்ள மார்க்கண்டருக்கு அழியா ஆயுளை அருளியவனும், ஒளியுள்ள தீப்போலும் விடத்தை வாயிடமாகக் கொண்ட பாம்போடு உறையும் சந்திரனையும், கங்கை நீரால் அலைக்கப்படும் அணை போன்ற பக்கத்தினையும் உடைய செஞ்சடையீசன் உறையும் திருக்கோயில், சிராப்பள்ளியே எ-று.

கு-ரை:- உறைப்பு - நெஞ்சழுத்தம், வன்கண்மை; 'உறைப்புடைய இராவணன்' என்ப (தேவா.) மறைப்புடை - வேதநியமங்களைத் தன்சார்பாகக்கொண்ட. மார்க்கண்டேயன் என்பது மார்க்கண்டயன் எனத் திரிந்தது; 'மார்க்கண்டனுக்கு' எனத் திருத்தங்கொள்ளினுமாம். சிறைப்புடை - நீரை வெளிச்செல்லவிடாத அணைப்பக்கம்; 'சிறையு முண்டோ செழும்புனல் மிக்குழி' என்ப. (மணிமே.)

**பள்ளியம் மாதுயி லேற்கின் றிலைபா விப்பிழைத்தாய்**
**வள்ளிதன் மாமன் வரிசிலை வேடன்வட் கார்வணக்கும்**
**வெள்ளியம் மாமலை யாளன் சிராமலை மேன்மலையன்**
**உள்ளியம் மாவிரந் தாலுகந் தீபத முன்மத்தமே. 70**

(பள்ளியம் மாதுயிலெற்கின்றிலை பாவிப் பிழைத்தா[ய்]
வள்ளி தம் . . . . . . சிலைவெடன் உட்கா . . . .
வெள்ளியம் மாமலையாளன் சிராமலைமென்மலையன் உள்ளி
யம்மாவிரந்தா லுகந்திய பத முன்மத்தமெ.)

*இது, தலைவனை நினைந்து வருந்திய தலைவிக்குத் தோழி கூறியது.*

**பொ-ரை:-** *அன்னாய்! வள்ளியம்மையின் மாமனும், மேருச்சிலை கொண்ட வேடனும், பகைவரை வணங்கச் செய்யும் கயிலாய மலையாளனும், சிராமலைமேல் வாழும் மலையனும் ஆகிய ஈசன், தன்னைத் தியானிப்போர் இரந்து வேண்டினால், அவர்க்கு அவன் உவந்தளிக்கும் பதவி பைத்தியந்தான்; அத்தகையானைப் பள்ளியிற் படுத்து உறக்கங்கொள்ளாதவளாய் (எப்பொழுதும்) துதித்துப் பிழைசெய்தனையே எ-று.*

(மத்தமைத்தான் சென்னிப் பொன்னிமவான் பெற்றமாது
தன்வெ . . . . . . முழுதும் பித்தமைத்தாய் சிந்தை நொந்து
குலமந்து பெர்மாக்கண் முத்தமைத்தாய்க்கங்கை . . . ாகில்
. . . . நின்முதிர்ச்சியையெ.) 71

*71ம் பாட்டு இடையிடையே எழுத்துக்கள் விடப்பட்டும், பிழைபட்டும் உள்ளதனால் பொருள் புலனாகவில்லை.*

(முதிரும் பாவை முகந்த கொண்மு முகடேறி முன்னி யதிரும் மா . . ப்பது . . . . . வ்வமுங் கதிருங் கலந்த சிராமலையாளி கழனெம்புகதிர்த் திருவருள்பொ லினியானை யின்றெய்துவனே.) 72

(யானையின்றெய்[தபிடியாமட .... யன்பர்தம் வாழ்நாளை .... றென்று விட்டார் சிந்தை .... .... .... னெறுங்கொன்ற விரன் சிராமலையெவினப்பாற் பூனை நின்றெங்கும் பொரிய தி[ர்தினம்] புகுந்தனரே.) 73

**தினம்புகு கின்றது தன்பணை யாகத்தண் காரினமா**
**வினம்புகு தேர்நின் றிழிந்துபுக் காரன்ப ரின்றதுவுஞ்**
**சினம்புகு திண்விடைப் பாகன் சிராமலைத் தெய்வமன்னுள்**
**மனம்புகு வெம்பிணி தீரக் கொணர்ந்திட்ட மாமருந்தே. 74**

(தினம்புகுகின்றது தன்பணையாகத்தன் .... .... [மா]வினம்புகு தேர்நின்றிழிந்து புக்கா ரன்பரென்று . . . வுஞ் சினம் புகு திண்விடைப் பாகன் சிராமலைத்தெய்[வமன்னுன்] மன[ம்]புகு [வெம்]பிணிக்கொ .... .... ணந்திட்டமாமருந்தெய்.)

*இது, பிரிந்த தலைவனது தேர்வரவினைத் தோழி எடுத்துரைத்தல்.*

**பொ-ரை:-** *கார்மேகமே தன் முரசாகக் குதிரைகள் பூட்டிய தேரினின்றிழிந்து அன்பரான தலைவர் நம் மாளிகையுட் புகுந்தனர். அதனால் சுபதினம் இன்று நம்மைஅடையலாயிற்று. இவ்வாறு அடைந்தது சினமும் திண்மையும் உடைய இடபவாகனை ஈசனது சிராமலை*

*72, 73ம் பாட்டுக்கள் இடையிடையே எழுத்துக்கள் விடப் பட்டும், பிழைபட்டும் உள்ளதனால் பொருள் புலனாகவில்லை.*

வாழும் தேவதைபோல்வாளாகிய நம் தலைவியின் மனநோய்தீரக் கொணர்ந்துதவிய அரிய மருந்தாம் எ-று.

கு-ரை:- தினம் - நன்னாள், சுபதினம்; 'முகூர்த்தத்திற்கு தினம் பார்க்கவேண்டும்' என்ற உலகவழக்குங் காண்க. கார்பணையாக என இயையும்; பணை - முரசு. மாவினம் - குதிரைகள்.

**மருந்தே சிராமலை மாமணி யேமரு தோடமர்ந்தாய்**
**குருந்தேய் நறும்பொழிற் கற்குடி மேய கொழுஞ்சுடரே**
**முருந்தேய் முறுவ லுமைகண வாமுதல் வாவெனநின்**
**றிருந்தே நிறையழிந் தேன்வினை யேன்பட்ட வேழைமையே.**

(மருந்தெய் சிராமலை மாமணியெ மருதாடமர்ந்தாய் குருந்தெய் நறும்பொழிற் கற்குடி மெய கொழுஞ்சுடரெய் முருந்தெய் முறுவலுமைகணவா முதல்வாவெனநின் றிருந்தெய் நிறையழிந் தென் வினையென பட்டவெ[ழு]மையெ)

*இது, தலைமகள் பிரிவாற்றாது தலைமகனை நினைந்து இரங்கிக் கூறியது.*

**பொ-ரை:-** *சிராமலையில் அருமருந்தும் உயர் மணியும் போன்றவனே! இடைமருதூரில் எழுந்தருளி உள்ளவனே! குருந்தமரங்கள் பொருந்திய சோலையோடு கூடிய திருக்கற்குடியில் மேவிய கொழுவிய சோதிக் கொழுந்தே! இறகின் அடிக்குருந்தனைய பற்கள்கொண்ட உமாதேவியின் நாயகனே! யாவர்க்கும் தலைவனே! என்று இவ்வாறு இருந்துகொண்டே என் மனவடக்கத்தை இழக்கலானேன்; இவை தீவினையாட்டியாகிய யான் உம்மால் அடைந்த ஏழைமையாம் எ-று.*

கு-ரை:- மருது - திருவிடைமருதூர்; கற்குடி - திருச்சிராப்பள்ளிக்கு மேல்பாலுள்ள தலம்; இதனை உய்யக்கொண்டான் திருமலை என்பர். பரம்பொருளான உம்மையே நினைத்திருந்தும், நான் நிறையழிந்தது என் தீவினை போலும் எ - று.

ஏழைப் புதல்வ னெனக்குத் துணையுமக் கெங்கையையுங்
கோழைக் குரற்பெரும் பாணனை யுங்கொளல் குன்றர்கொன்ற
வாழைக் குலைமண நாறுஞ் சிராமலை வாழ்த்தலர்போல்
மோழைப் பெரும்பொய்சொல் லேல்நில்ல லென்முன
முன்கடையே. 76

(ஏழைப்புதல்வன் னெனக்குத் துணையுமக் கெங்கையையுங்
கொழைக்குரற் பெரும்பாணனையுங் கொளக்குன்றர் கொன்ற
வாழைக்குலை மணநாறுஞ்சிராமலை வாழ்த்த[லர்]பொல்
மொழைப்பெரும் பெய் செல்லெலு நில்லெனுமென்மு[ன்]கடையே.)

இஃது, ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைவனொடு தலைவி புலந்து கூறியது.

பொ-ரை:- மலைவாணர் வெட்டிய வாழைக் குலைகள் எங்கும் மணம்வீசும் சிராமலையை வாழ்த்தாதார்போல், கலக்கந்தரும் பெரும் பொய்யினை நீர் சொல்லாதீர்! தலைவாயிலினின்று என்முன் நில்லாதீர்! எனக்குத் துணையாக ஏழைமை உடைய என் புதல்வன் உள்ளான்; உமக்குத் துணையாக என் தங்கையான பரத்தையையும் தழுதழுத்த குரலுள்ள பெரும் பாணனையும் கொள்க எ-று.

கு-ரை:- எங்கை - காதற்பரத்தை; மோழை - கொந் தளிப்பு, குமிழி; மோழைப் பெரும் பொய் - கேட்டுக் கலங்கத்தக்க பொய்.

**கடையகத் துச்சென்று காஎிமிர்த் தேநின்று கைவிரித்து**
**நடையகத் துப்போக வென்னத் திரிவர் நருமதிசேர்**
**சடையகத் துக்கங்கை வைத்தான் சிராமலைச் சார்வொழிந்து**
**படையகத் துச்செல்வ ராய்நல்ல ரான பளகர்களே. 77**

(கடையகத்துச் சென்று கா[ளி]மிந்து நின்று கை[வி]ரித்து நடையகத்துப் பெரிதென்னத்திரிவர் நரு மதிசேர் சடையகத்துக் கங்கைவை[த்தா]ன் சிராமலை சார்வொழித்து படையகத்துச் செல்வராய் நல்லாரான .... .... .... ரே.)

**பொ-ரை:-** விளக்கமுள்ள பிறைசேர்ந்த சடா பாரத்தே கங்கையை வைத்த ஈசனது சிராமலையான புகலிடத்தை யொழிந்து, படைதங்குமிடத்தைச் சார்ந்து நல்லவர் என்று பேர்படைத்த தீயோர், செல்வர்மனை களின் வாயிற்கடையிற் சென்று தம் கால்களை நிமிர்த்த வண்ணம் கரங்களை விரித்து நீட்டி, அம்மனைக்குரியார் 'வெளிநடையிடமாகச் செல்க' என்று கூற வெளிச் சென்று திரிவார்கள் எ-று.

கு-ரை:- 'படையகத்துச் செல்வராய் நல்லரானவர் என்பார் சேனைவீரராய்ச் சேவகம் செய்து பொருள் ஈட்டி நல்லவரென்று பேர்படைத்தவரை, இன்னோர் கொலைத் தொழிலே முனைந்தவராயினும், வெற்றிவீரர் என்று பேர் படைத்தவராகலின் 'நல்லரான பளகர்' எனப்பட்டார். பளகர் - குற்றமுடையோர், தீம்பர்; இனி, படைசென்ற இடமெல்லாம் சென்று அதற்குவேண்டிய பண்டங்களை

வாணிகம் செய்து செல்வரான பளகர் எனினுமாம். படை மூலம் வாணிகக் கொள்ளையடித்தல் பாவச்செயலாகக் கொள்ளப்பட்டதுபோலும். பிறநாட்டுள் படையெடுத்துச் செல்லும் வேற்றரசரின் சேனைக்குப் பண்டங்களைவிற்று வாணிகம்செய்யும் வழக்குப் பிற்காலத்தும் உண்டு.

**பளகன் னிவனெனப் பாரோர் நகப்பனை யின்மடன்மேல்**
**அளகந் நுதலி யொருவர்வந் தாரடல் யானைக்கன்று**
**மிளகு முடைமையி னுமுளை மென்றுமென் றேன்பருகிக்**
**குளகு நுகருஞ் சிராமலை சூழ்ந்த குலப்பதிக்கே. 78**

(களகன் னிவனெனப் பாரோர் நகப் பனையின்மடன்மெ லளகந்நுதலி யொருவர் வந்நாடலியானைக் கன்று மிளகு மடமையின் முளையும் மிளகமென்றென் பருகிக் குளகுந் நுகருஞ் சிராமலை சூழ்ந்த குலப்பதிக்கெய்.)

*இது மடற்றிறங் கூறல்; தோழிகூற்று.*

**பொ-ரை:-** *வலிமிக்க யானைக்கன்றுகள் ஆச்சாவின் இளமரமுளையை அதனில் மிளகுக் கொடி படர்ந்திருத் தலைக் குறிக்கொள்ளாமல் மென்று (அதனால் உண்டான கார்ப்புத் தாங்காது) தேனைப் பருகித் தழையையும் நுகரும் சிராமலை சூழப்பட்ட இத்தலைநகர்க்கண், 'இவன் பொல்லாத தீம்பன்' என்று உலகினர் நகைக்கும்படி, தோழீ! பனைமடலேறி ஊர்ந்தவராய் ஒருவர் இங்கு வரலாயினர் எ-று.*

**கு-ரை:-** *பனைமடல் - பனங்கருக்கால் செய்த குதிரை. தலைவியை அடையவிரும்பிய தலைவன் ஊரார் தன்னைப் புறக்கணித்ததனால் அக்குதிரையை ஊர்ந்து தன்மேனியை*

வருத்திக் கொள்வனென்றும், அக் கொடுஞ்செயற்கிரங்கித் தலைவியின் சுற்றத்தார் அவனுக்கு மகட்கொடை நேர்வர் என்றும் கூறுவர். அளக நுதல் - முன்மயிரொழுக்கினைக் கொண்ட நெற்றியை உடையாள்; தலைவியை நோக்கிய விளி. ஆ - யாமரம்; ஆச்சா என்பர் (குறுந்தொகை 232, 307.); இஃது யானைக்கு உணவாவது.

**பதியொற் றிடராற் படுதலை யிற்பலி கொள்வதெங்கும்**
**கதியொற்றி யூர்வது காய்சின மால்விடை காதலியும்**
**நதியொற்றி யூர்நகர் நஞ்சுண்பன் தண்டலைக் கோடுறிஞ்ச**
**மதியொற்றி யூருஞ் சிராமலை மாதவர் வாழ்வகையே.** 79

(பதியொற்றிடராற் படுதலையிற் பலிகொள்வ தெங்குங் கதி யொற்றி ஊர்வது காசின் மால்விடை காதலியுந் நதி யொற்றியூர் நகர் நஞ்சுண்பன தந்தலை .... .... .... ஞ்ச மதியொற்றியூருஞ் சிராமலை மாதவர் வாழ்வகையெ.)

**பொ-ரை:-** பொழிலிடம் உள்ள மரக்கோடுகள் உரசுதலால் சந்திரன் தத்தித்தத்தி ஊர்ந்துசெல்லும் சிராமலைமாதவரான ஈசன் வாழ்வகையினைக் கேட்பின் பெரியதாக நேர்ந்ததோர் இடரால், பட்டொழிந்த சிரக் கபாலத்தால் ஏற்பது பலியாகும். எல்லாவிடத்தும் வேகமாகச் செல்லவேண்டி அவர் ஏறிச் செலுத்துவது பெரிய இடபமாகும்; அவர் காதலி கங்காதேவியாவள்; நகரம் ஒற்றியூர்; உண்பது நஞ்சாகும் எ-று.

**கு-ரை:-** பதி - பெருமை, சிறப்பு. பதியொற்று இடர் - தலைமை காரணம்பற்றி நேர்ந்த இடர் எனினுமாம். அவ்விடர் பிரமன் தலையொன்றைக் கொய்தமைப் பற்றி உண்டாயது. கதி ஒற்றி - வேகத்தை மேற்கொண்டு, கதி அசுவகதி போல்வது.

**மாதவர் வாழுஞ் சிராமலை மாமணி கண்டரெங்கே**
**போதுவ ராகிலும் போயடை வாயன்னம் நீநடுவே**
**ஈதவர் விதியன் றென்பவர் போலிருந் தோர்க்குணர்த்தாய்**
**தூதுவர் [யாவி [ரெ] சால்வாயவர்பாற்செ [ன்று]**
**சொல்லுதற்கே] 80**

(மாதவர்வாழுஞ் சிராமலை மாமணிகண்டாங்கெய் பொதுவராகி லும் பொமடவாயன்ன [நிலநடு]வெயித [வர் விதியன்றென் பர்பொ லிருந்தொ]ங் குணத்தொய் .... .... .... யாவி [ரெ]சால்லாயவா பாற்செ[ன று] சொல்லுதற்கெய்.)

குரை:- *முன்னடிகளிலிருந்து இப்பாட்டு அன்ன விடுதூது என்பது புலனும்; முன்னடியிரண்டன் பொருள் வெளிப்படை, பின்னடிகள் பிழைமலிவால் பொருள் புலனாகவில்லை.*

**சொல்லும் பொருளும் சுவையும் பயனு மிலவெனினும்**
**அல்லும் பகலு மமிர்தா மெனக்குப் புரமெரிப்பான்**
**வில்லுங் கணையுந் தெரிந்த பிரான்றன் சிராமலைமேல்**
**எல்லுண் கனைகழ லின்குணம் பாரித்த வெண்கவியே. 81**

(சொல்லும் பொருளுஞ் சுவையும் பயனு மிலவெனினும் அல்லும் பகலு மிகதாமெனக்குப் புரமெரிப்பான் வி[ல்லுங்] கணையுந் தெரிந்தபிரான்றன் சிராமலைமெ லெல்லுங்கனை கழலின் குணம் பாரித்த வெண்கவியெ.)

**பொ-ரை:-** *திரிபுரங்களை எரித்தல்வேண்டி மேரு வான வில்லையும், திருமாலான கணையையும் தெரிந்து கொண்ட பெருமானது சிராமலையின்மேல் ஒளிகொண்டு ஒலிக்குங் கழலணிந்த திருவடிகளின் பெருமைகளை*

விளக்கி நிற்கும் என் கவிகள், சொல் பொருள் சுவை பயன் இவை இல்லையேனும் எனக்கு இரவும் பகலும் அமிர்தம்போலத் தித்திப்பனவாம் எ-று.

கு-ரை:- ஈசனது பெருமைகளை எடுத்துரைப்பன வாதலால், சொல் முதலிய நயங்கள் இல்லாதவையாயினும் என் பாடல்கள் தித்திப்பன என்றது, இவற்றைக் கொண்டே இரவும் பகலும் துதித்து ஈசனை வழிபடு கின்றேன் என்றபடி.

**கவியலைத் துண்ணுங் கவைஞர்தங் காமரு கார்க்களிற்றின்**
**செவியலைத் துண்ணுஞ் சிராமலை வாழ்நனைச் சேரகில்லார்**
**புவியலைத் துண்ணும் போர்வன்கை வெஞ்சிலை யேவலராய்**
**நவியலைத் துண்ணுங் கொடுங்கை யவரொடு நண்ணுவரே. 82**

(கவியலைத்துண்ணுங் கவைஞர்[த]ங் காமரறு கார்க்களிற்றின்
செவியலைத்துண்ணுஞ் சிராமலை வாழ்நனைச் செரகில்லார்
புவியலைத்துண்ணும் பொர்வண் .... .... .... வலராய்
நவியலைத்துண்ணுமங்காடு நங்கை .... ராடு நண்ணுவரெ.)

பொ-ரை:- குரங்குகளை வேட்டையாடி உண்ணும் மலைவாணர், காவற்பொழிலை வந்தழிக்கும் கரிய களிற் றினைப் பிடித்து, அவற்றின் செவிகளைப் பின்னப்படுத்தி உண்ணும் சிராமலை வாணனை ஈசனை அடைந்துய்யா தவர், உலகினரை அலையச்செய்து கொள்ளைகொண்டு உண்பவரும், போர்செய்யும் கொடிய கைவில்லில் அம்பிட்டு எய்ய வல்லவரும், மான்களை வேட்டையாடி உணவாகக் கொள்ளும் கொடுங் கையினருமான காட்டு வேடுவர் குழாத்தோடு சேர்ந்தவராவர் எ-று.

கு-ரை:- கவைஞர் - மலைக்குறவருள் ஒருசாரார். முனை கவராகவுள்ள இருப்பாயுதத்திற்குக் கவை என்பது பெயராதலால், அதனைக் கருவியாகக்கொண்டவர் கவைஞர் எனப்பட்டனர். 'குரங்கு தின்னிகள்' என்ற ஒருவகை மலைக்குறவர் உளராதலின். 'கவியலைத் துன்னுங் கவைஞர்' என்றார். கா மரு - மலைச் சோலையில் மருவிய. ஏவலராய் - அம்பிட்டெய்ய வல்லவராய்.

**நண்ணுதண் கானற் படுமலர் நாறு நறுங்குடுமி**
**விண்ணுதல் போழுஞ் சிராமலை வெற்பனை வேறிருந்து**
**மண்ணுத லாரப் பணிந்தவ ஞம மனத்தடக்கி**
**எண்ணுதல் வல்லார்க் கெளிதிமை யோர்தம் மிரும்பொழிலே.**

(நண்ணுதலர் காநற்[படு] மலரு ந[றுங்] குடுமி விண்ணுதல் பொழுஞ் சிராமலை வெற்பனை வெறிருந்து மண்ணுதல ரடிப்பணிந்த ஞமமதை .... டக்கயென் .... வல்லார்க் கெளி திமையொர்த மிரும்பொழிலெ.)

பொ-ரை:- தண்மைபொருந்திய மலைச்சோலைகளில் பூக்கும் மலர்மணங் கமழும் சிகரமானது விண்ணுச் சியை ஊடுருவும் சிராமலைவாணனாகிய ஈசனைத் தனியாக இருந்து, நெற்றி பூமியிடம் பதியப் பணிந்து அவன் திருநாமங்களை உள்ளத்தடக்கித் தியானிக்க வல்லவர் கட்குத் தேவர்கள் வாழும் உலகத்தை அடைதல் எளிது எ-று.

**இரும்பிடைச் சேர்ந்தெண் ணீர்வளன் பெற்றிமை யோரிருக்கப்**
**பொரும்படைக் கூரெய்த பொன்மலை யாயைப் புணர்ந்த**
**கரும்பிடைச் சாறுங் கடலினமிர்துங் கனிவளனுஞ் [பின்னைக்**
**கரும்பிடைத்தேனு நன் பாலுநின் போலச் சுவையில்லையே. 84**

(இரும்பிடைச் சேர்ந்த தெண்ணீர் வளன்மைபெற் றிமை
யொரிருக்கப் பொரும்படைக் கூரெய்த பொன்மலையாயைப்
புணர்ந்தபின்னைக் கரும்பா .... .... .... .... .... மிர்துங்
களிவளனுஞ் சுரும்பிடைத் தெனு நனபாலு நின்பொலச்
சுவை யில்லையெ.)

**பொ-ரை:-** காய்ச்சிய இருப்புக் கொழுவைச் சேர்ந்த தெள்ளிய நீரின் தன்மையைப் பெற்று, தேவர்கள் மனமுருகி ஒடுங்கிநிற்க, தான் பொருதற்குரிய படைகளைக்கொண்டு திரிபுரங்களை எய்தெரித்த பொன் மலையனை உன்னை நான் கூடியபின்பு, கரும்பின் சாறும், கடலின் அமிழ்தும், கனியின் வளமும், சுரும்பு சூழும் தேனும் உன்னைப்போல எனக்குச் சுவைதருவன அல்ல எ-று.

கு-ரை:- இரும்பிடைச் சேர்ந்த நீர் வன்மைபெறுதல் - காய்ந்த இரும்புண்ட நீர்போல உயிரும் உள்ளமும் உருகி இறைவன்பாற் சுவறி ஒடுங்குதல்; 'தீர இரும்புண்ட நீரதுபோல என்னுயிரை ஆரப்பருக' என்ப (திருவாய்). படைக்கு - படையால்; 'நோக்கிற்கு வாடினேன்' (திருக். கோ. 25.) என்புழிப்போல நான்காவது மூன்றன்கண் வந்தது. ஊர் - திரிபுரம்.

(இல்லையென்பார் பொருளுண்டெனப் பரிவவிரதி பழஞ்
சொல்லு[ந்] த[ளை]யாலவர் இர[ண]ங்கள் முன்றின் சுடர்
விளக்காததில்லையென்பர் தென சிராமலையாயென்று
சென்றிறைஞ்சி வல்லையன்பர்க [நெஞ்செ]யடு .... [னியின]
யினவன் டழிக்கெ) 85

*85 ம் பாட்டு இடையிடையே எழுத்துக்கள் விடப்பட்டும், பிழை பட்டும் உள்ளதனால் பொருள் புலனாகவில்லை.*

(பழிக்கும் இருட்படலம் பெரருளன் கையுமஞ்செழுதயுவி ழிக்கும் இமையவரெறும் மிடத் தெதிர்வந்தருவி தெழிக் [கு]ஞ் சிராமலைச் சித்தரைத் திர்த்த .... .... .... யக்கழிக் கும மிது மெய்ம்மை கைகண்டயொகங் கடவிடத்தெ.) 86

**இடங்கொண்ட வேலையு மேழ்மலை யுந்திசை யானையெட்டும்**
**படங்கொண்ட நாகஞ் சுமந்தவிப் பாரும் பதறுங்கொலோ**
**திடங்கொண்ட சாரற் சிராமலைக் கூத்தன்செம் பொற்கழல்சேர்**
**நடங்கொண்ட சேவடி குஞ்சித் தருள்செய்த நாளகத்தே. 87**

(இடங்கொண்டவெலையு மெ[ழு]மலையுந் திசையானையெட்டும் படங்கொண்ட நாகஞ் சுமந்த விப்பாருமெ படருங் கொல்லொ திடங்கொண்ட சாரனற் சிராமலைக்கூத்தன் செம்பொற்கழல்செர் நடங்கொண்ட செவடிக் குஞ்சித் தருள் செய்த நான[க]த்தெ.)

பொ-ரை:- *திண்மையுடைய சாரலுள்ள சிராமலைக் கூத்தனுன ஈசன், பொற்கழலணிந்த தன் திருவடிகளைத் தூக்கி வளைத்து நடித்தருளிய நாளிலே—பரந்த கடல் களும், ஏழுமலைகளும், அட்டதிக்கயங்களும் படத் தினைக் கொண்ட ஆதிசேடன் சுமந்த உலகும், நடுக்கத் தாற் பதறினபோலும் எ-று.*

**அருள்செய் வதும்படை யேன்மெய்ம்மை யேயடி**
**யேனுக்கிம்மைப்**
**பொருள்செய் துதவும் புதல்வரைத் தந்தென் பொல்லாத**
**சொல்லால்**
**மருள்செய்த மாலைகொண் டானைவண் டாருஞ் சிராமலைவாய்**
**இருள்செய்த கண்டனை யேதொண்டர் காள்வந்**
**திறைஞ்சுமினே. 88**

*86 ம் பாட்டு இடையிடையே எழுத்துக்கள் விடப்பட்டும், பிழை பட்டும் உள்ளதனுல் பொருள் புலனுகவில்லை.*

(அருளுசெய்வதும் படையென்மெய்ம்மையெ யடியெ[நு]க் கிம்மை பொருள்செய்துதவும்[பு]தல்வரைத் தந்தென் பொல்லாத சொலரெல் மருள்செய்த மாலைகொண்டானை வண்டாரு[ஞ்] சிராமலைவா யிருள்செய்த கண்டனையெ தொண்டர்கள் வந்திறைஞ்[சுமினே.])

**பொ-ரை:-** *பரமன் எனக்கருள் புரிதற்கு உரிய திருத்தொண்டுகளைப் புரிந்தவனல்லன்; (ஆயினும்) இம்மைச் செல்வத்தைப் பெருக்கி உதவும் புதல்வர்களை அடியேனுக்கு அவன் அளித்ததுமட்டுமன்றித் தீய சொற்களைக்கொண்டு பொருள்மயக்கம் தரும்படி யான் செய்த இவ்வந்தாதிமாலையை ஏற்றுக்கொண்டவனும், வண்டுகள் நிறைந்த (மலர்ப்பொழில் உள்ள) சிராமலையில் கோயில் கொண்டவனுமான நீலகண்டனைப் பிறர்க்கு அடிமைப்பட்ட தொண்டர்காள்! இங்கு வந்து ஏத்துமின்கள்! (என்போலவே உமக்கும் அவன் அருள் புரிவன்) எ-று.*

கு-ரை:- *இந்நூலாசிரியர், வாணிகத்தாற் பொருளீட்டிவந்த புத்திரர் பலரை உடையவராயிருந்தார் என்பது இப்பாட்டால் வெளியாகின்றது.*

**வந்திறைஞ் சித்தளர்ந் தேன்செல்லு மோசிந்தை மாதவமேற்**
**சந்திறைஞ் சிப்படர் சாரற் சிராமலைத் தாழ்பொழில்வாய்க்**
**கொந்திறைஞ் சிக்கமழ் கோதை குலாவிக் குழலவிழப்**
**பந்திறைஞ் சிப்பிடிப் பாளிடைக் கேசென்று பற்றுண்டதே. 89**

(வந்திறைஞ்சித் தளர்ந்தென் செல்லுமொ சிந்தைமாதவர் மெற் சந்திறைஞ்சிப் படர்சாரற்சிரா[ம]லைத் தாழ்பொழில் வாய்க் கொந்திறைஞ்சிக் கமழ்கொதை குலாவிக்குழலவிழப் பந்திறைஞ்சிப பிடிப்பாளிடைக்கெ சென்று பற்றுண்டதெ)

இது, பூஞ்சோலையில் பந்துவிளையாடும் பாவை ஒருத்தியின் பேரழகில் ஈடுபட்ட தவமுனிவன் ஒருவன் கூற்று.

**பொ-ரை:-** சந்தனமரங்கள் வளர்ந்து படர்ந்த சாரலை உடைய சிராமலையிலுள்ள விரும்பத்தக்க சோலையில், கூந்தலிலே கொத்துக்களை உடையதாய் தாழ்ந்துமணக்கும் மாலை அசைந்து அவிழும்படி, அடித்த பந்தினைக் குனிந்து பிடிப்பவளான இந்நங்கையின் இடையழகிலேயே சென்று ஈடுபட்டது என் சிந்தை; அதனால் இங்குவந்து சோர்ந்து தளர்வுற்றேன்; இனி என்மனம் மாதவம் புரிவதின்மேற் செல்லவல்லதோ? இல்லை எ-று.

கு-ரை:- மாதவரையும் மயக்கவல்ல பேரழகுடையராய் விளங்கியவர் அம்மலைமகளிர் என்றபடி.

**தேறுசொல்லார்தமிழ்த்தென்வேம்பையரண்ணல்செங்குவளை**
**நாறுமல் லாகத்து நாராயணன் பண்டை நான்மறையும்**
**ஏறும்வல் லோனைச் சிராமலை யாளியை யீங்குரைத்த**
**நூறும்வல் லோர்தம்மை நோக்கவல் லார்க்கென்று**
**நோயில்லையே. 90**

(தெறு சொல்லாதமிழ்த்தென் [வெம்பயரண்ணற்]செங்கு வளை நாறுமல்லாகத்து நாராயணன் பண்டை நான்மறையும் எறுமல்லொனைச் சிராமலையாளியை யிங்கு .... .... த்தனிறு மல்லொர்தம்மை நொக்கவல்லார்க்கென்று நொயில்லையெ)

**பொ-ரை:-** தெளிந்த சொற்களுள்ள தமிழ் மொழியில் வல்லவனும், தென்பாலுள்ள மதில்சூழ்ந்த

வேம்பைநகரில் வாழ்வார்க்குத் தலைவனும், செங்கழுநீர் மாலை மணக்கும் வலிய மார்பினை உடையவனும், நாராயணன் என்ற நாமம் உடையவனுமாகிய நான், நான்மறைகளோதவும் இடபத்தினைச் செலுத்தவும் வல்லோனாகிய ஈசனைப்பற்றி, இவ்விடமிருந்து பாடிய கலித்துறை நூறு பாடல்களையும் கற்று வல்லோரைத் தரிசிக்கும் பேறுடையார்க்குத் தீவினையாகிய நோய் என்றும் இல்லையாம் எ-று.

கு-ரை:- தென்வேம்பை என்றதனால், பாண்டிநாட்டதான வேம்பத்தூர்போலும்; சோணாட்டும் அப்பெயர் பெற்ற ஊரொன்று உள்ளது. நான்மறையோதவும் வல்லோன் ஏறுசெலுத்தவும் வல்லோன் எனக் கடைநிலைத் தீவகமாகக்கொள்க. 'செங்குவளை......ஆகத்து' என்றதனால், இவ்வாசிரியர் வணிகர்குலத்தவராதல் பெறப்படும், செங்குவளைமாலை அவர்க்கே உரியதாம்.

**நோயிலங் காத லுடையநெஞ் சேநுரை வெண்கடலுட்**
**போயிலங் காபுரஞ் செற்றபொற் றேரவன் போந்திருந்து**
**வாயிலங் கார்தரு மந்திரத் தால்வணங் கிப்பணிந்த**
**சேயிலங் கார்கழற் றீர்த்தன் சிராமலை சென்றடைந்தே. 91**

(நொயிலங் காதலுடைய நெஞ்செய் நுரைவெண் கடலுட்பொயிலங்காபுரஞ் செற்ற பொற்றெர்வன் பொந்திருந்து வாயிலங்கார்தரு மந்திரத்தால் வணங்கிப்பணிந்த செயிலங்கார் கழற் றிர்த்தன் சிராமலை சென்றடைந்தெ.)

**பொ-ரை:-** நுரை மிகுதியால் வெண்மை நிறமாகத் தோன்றும் கடலின் உள்வழியே சென்று இலங்காபுரத்

தவரை வென்றழித்துப் பின் புஷ்பக விமானத்தில் ஏறி வந்த இராமபிரான் இங்கு வந்திருந்து தம் வாய்நிறைந்து விளக்கமுற்ற மந்திரமூலம் வணங்கிப்பணிந்த, செம்மை திகழும் கழலையணிந்த ஈசனது சிராமலையைச் சென்று சேர்ந்தபின், அன்பார்ந்த நெஞ்சமே! (உடலையும் உயிரை யும்பற்றிய) நோய்கள் இல்லாதவராவோம் எ-று.

கு-ரை:- காதல் - பத்திமை; பொற்றேர் என்பது ஈண்டு புஷ்பகவிமானத்தைக் குறிப்பதாம்; இராமனால் வணங்கப்பட்ட மூர்த்தி இத்தலத்துச் சிவபிரான் என்பது புராணவரலாறு. (செவ்வந்திப் புராணம்; நினைத்தது கொடுத்த சருக்கம். 5.) நெஞ்சே! சென்றடைந்து நோயிலம் என இயையும்.

**அடைக்குங் கதிர்மணி யார முலைக்கணிந் தல்குன்மெல்லப்**
**புடைக்குங் கலைபுனை ந் தோதியிற் போது பொதிந்துவிட்டார்**
**விடைக்கு முமைக்குநற் பாகன் சிராமலை மெல்லியலீர்**
**இடைக்கு மிளையவர்க் கும்பகை யோநும்மை யின்றவரே. 92**

(அடைக்குங் கதிர்மணியாரம் முலைக்கணிந் தல்கின் மெல்லம்
புடைக்குங்கலை புனைந்தொதியிற்பொது பொதிந்துவிட்டார்
விடைக்கும் முமைக்கு நற்பாகன் சிராமலைமெல்லியரிடைக்
கும் இளையவர்க்கு[ம்]பகையொ நும்மை யின்றவரெய்.)

இது, புனத்திடைத் தலைமகளைக்கண்டு ஈடுபட்ட தலைவன் கூறியது.

**பொ-ரை;-** மெல்லியலீர்! இடபவாகனனும் உமை யைப் பாகத்துடையவனுமான ஈசனது சிராமலையில் மணிகளாலான ஆரத்தை முலைக்கண் அணிவித்தும்,

புடைக்கும்படியுள்ள கலையை மெல்ல அரையில் உடுப்பித்தும், கூந்தலில் மலர்களைப் பொதிந்தும் உம்மைப்பெற்ற தாயர் (அலங்கரித்து உம்மை) வெளியில் விட்டனர்; அவர்கள், நும் இடைக்கும் என்போலும் இளைஞர்க்கும் பகைவர்போலும் எ-று.

**ஈன்றுள் வருந்தவிம் மைப்பிறந் தம்மைக் கிரங்கிநையும்**
**ஊன்றுய் மடிக்கொண் டொளிப்போம் வெளிப்பட்**
**டொருங்கிநின்றேம்**
**தேன்றுழ் சிராமலை வாரியின் மூரித்தெய் வக்களிறே**
**தோன்று யெமக்கொரு நாள்வினைப் பாசத் தொடரறவே. 93**

(ஈன்றுள் வருந்த விம்மைபிறந் தம்மைக்கிரங்கி நையு மு[ன்]றுமுடி கொண்டொ]ளிப்பொமெ]ளிப்பட்டொருங்கி நின்றெந் தென்றுழ் சிராமலை வாரியின் மூரித் தெய்வக்களி றெய்தொன்று எமக்கொருநாள் வினைப்பாசத் துடரறவெ.)

**பொ-ரை:-** *இப்பிறவியில் பெற்றவள் வருந்தும் படிப் பிறந்தும் மறுபிறவி எடுக்கும்போது உடல்நைந்து வேறு தாயரின் சூலை இடமாகக்கொண்டு அங்கு ஒளிக் கவும்போகும் நாம் இப்போது வெளிப்பட்டு வாழ ஒருப் பட்டுள்ளோம்; இத்தகைய தீவினைப்பந்தம் அறும்படி தேனொழுகும் சிராமலை வாரியில் உள்ள தெய்வக் களிறு போன்றவனே! ஒருநாள் எம்முன்தோன்றி எமக்கருள வேண்டும் எ-று.*

கு-ரை:- *பிறந்துள்ளநாம் இறந்து அடுத்த பிறவி எடுக்கக் காத்திருக்கிறேம் என்பது முன்னிரண்டடிகளின் கருத்து. சிராமலை வாரி: பண்புத்தொகை. வாரி - யானை*

யைப் பிணித்துக் கட்டுஞ் சாலை; யானைபிடிக்கும் இடமுமாம். 'வாரிக் கொள்ளா வேழம்' (மலைபடு) என்ப. 'களிற்றினம் வன்றொடர்ப் பிணிக்கும் வாரி' என்றார் கம்பரும்.

**தொடரிடை யாத்த ஞமலியைப் போலிருந் தேனிச்சுற்றத்**
**திடரிடை யாப்பவிழ்த் தென்னைப் பணிகொள் பொன்னைப்புரையுஞ்**
**சுடரிடை யாத்தபைங் கொன்றையு மத்தமுன் சூழ்சடையின்**
**படரிடை யாத்த பரம சிராமலைப் பால்வண்ணனே. 94**

(துடரிடையாத்த ஞமலியைப்பொ விருந்தெனிச் சுறறத் திடரிடை யாப்பவிழ்த்தென்னைப் பணிகொள பொன்னைப் புரையுஞ் சுடரிடையாத்த பைங்கொன்றை[யு]மத்த[முஞ்] சூழ்சடையின் படரிடையாத்த [பரமன்] சிராமலைப்பா[ல் வ]ண்ணனெ.)

**பொ-ரை:-** பொன்னைப்போலும் ஒளியை உடைய கொன்றைப் பூவினையும், ஊமத்த மலரினையும், சுற்றிய சடாபாரத்தின் பரப்பிடைச் சூடிய பரம! சிராமலைத் தேவனே! சங்கிலியால் தொடக்குண்ட நாயினைப்போல் யான் உள்ளேன்; இச்சுற்றமாகிய வன்னிலத்தினின்று பிணியவிழ்த்து என்னை உன் அடிமையாக்கிப் பணி கொள்வாயாக எ-று.

**பால்வண்ண நீற்றெம் பரன்சிராப் பள்ளிப் பரஞ்சுடர்தன்**
**பால்வண்ணங்கண்டுதம்பால்வண்ண நீங்கிப்பக்கத்திடஞ்சேர்**
**மால்வண்ணங்கண்டுதம்மால்வண்ணங்கொண்டவளைசரிந்து**
**மால்வண்ணங் கொண்டுவந் தார்சென்று காண்மின்கள் மங்கையரே. 95**

(பால்வண்ணநிற் றெம்பரன் சிராப்பள்ளிப் பரஞ்சுடர்தன் பால்வண்ணங் கண்டு நமபல் வண்ணநிங்கப் பக்கத் திடஞ்சேர் மால்வண்ணங் கண்டு தம்மால்வண்ணங் கொண்ட வளைசரிந்து மால்வண்ணங் கொண்டுவந்தார் சென்று காண்மின்கள் மங்கையிரே.)

பொ-ரை:- வெண்ணீற்றை அணிந்த பரமனது சிராப்பள்ளியில், அப்பரஞ்சுடரின் பால்போலும் நிறத் தைக்கண்ட (இப்பெண்கள் விரகத்தால் தாம் அடைந்த) பசலைவண்ணம் நீங்கி அப்பாலவண்ணமே கொண்டனர்; அவர் பக்கத்தை இடமாகக்கொண்ட திருமாலின் கரிய உருவினைக்கண்டவர் விரகமயக்கத்தால் தம் கைவளைகள் சரிந்து அக்கரிய உருவையே பெறலாயினர். (இவ்வாறு கண்டகண்ட உருவின் வண்ணங்களையே தாமும்கொண்டு இவர்கள் வந்த அதிசயத்தை மங்கைமீர்! காண்மின்கள் எ-று.

**மங்கையம் பார்கண்ணி பெண்ணுக் கரசி மலைமடந்தை**
**கொங்கைம் பாரங்கள் போல்வா னெழுந்து குவிந்திழிந்து**
**பங்கயம் பாதங்கள் போன்மலர் [பெருதவர்ப்]**
**பொன்மலைமேற்**
**புங்கவன் பாதந் தொழுதொழிப் போமெங்கள்**
**பொய்யுடம்பே. 96**

(மங்கை யம்பார்கண்ணி பெண்ணுக்கரைசி மலைமடந்தை கொங்கையம் பாரங்கள்பொல வானெழுந்து குவிந்தழிந்து பங்கயம் பாதங்கள் பொன்மலர் பெருதவர்ப் பொன்மலை மெற் புங்கவன் பாதந்தொழு தொழிப்பொ மெங்கள் பொய்யுடம்[பெ].)

**பொ-ரை:-** அம்புபோலும் கண்களுடைய மங்கையும், பெண்ணரசியுமாகிய உமாதேவியின் தனபாரங்கள் போல மேலிடம் விண்ணளாவக் குவிந்தும், கீழிடமாக மலர்ந்துள்ள தாமரைகள் பாதங்கள்போன்றும், விளங்கும் சிராமலை ஈசனது திருவடிகளைத் தொழுது எங்கள் நிலையற்ற உடலினைக் கழிப்போம் எ-று.

கு-ரை:- மேலெழக் குவிந்து நிற்கும் சிராப்பள்ளிக் குன்று உமாதேவியின் தனங்கட்கும், கீழிடம் மலர்ந்த தாமரைகள் அவள் திருப்பாதங்கட்குமாக உவமைகொள்க.

**பொய்யினைப் பேசிப் பொருளினைத் தேடிப் புழுப்பொதிந்த**
**மெய்யினைக் காத்து வெறுத்தொழிந் தேன்வியன் பொன்மலைமேல்**
**ஐயனைத் தேவர்தங் கோனையெம் மானையம் மான்மறிசேர்**
**கையனைக் காலனைக் காய்ந்தபி ரானைக் கழல்பணிந்தே. 97**

(பொய்யினைப் பெசிப் பொருளினைத் தெடிப் புழுப் பொதிந்த மெய்யினைக் காத்து வெறுத்தொழிந்தென் வியன் பொன் மலைமெ லையனைத் தெவர்தங்கொனை யெம்மானை யம்மான் ம[றி]செர் கையனைக் காலனைக் காய்ந்தபிரானைக் கழல் பணிந்தெ.)

**பொ-ரை:-** பொய்யினைப் பேசிப் பொருள்தேடியும், உடலினைக் காத்தும் வந்த யான் சிராமலை ஐயனும் தேவர் கோமானும், மான்மறிசேர்ந்த திருக்கரம் உடையவனும், யமனைச் சினந்தழித்த பாதங்கள் உடையவனுமான பெருமான்திருவடிகளை வணங்கியவனாய் அவற்றையெல்லாம் வெறுத்தொழித்துவிட்டேன் எ-று.

**கழலும் அருளுநஞ் சென்னிவைத் தோன்கன கச்சிலம்பிற்**
**சுழலு மலரு மசோகும் பலாசுந் தொடர்ந்தெழுந்திட்**
**டழலின் புறத்துவெண் ணீறெனத் தனநம் மணிவளையார்**
**குழலு மளகமும் பெய்யக்கொய் யாத குராமலரே.** 98

(கழலும் மருளுநஞ்[செ]ன்னி வைத்தொன் கனகச்சிலம்பிற்
சுழலும் ம[ல]ரும் மசொகும் பலாசுந் துடராதெழுந்திட்
டழலின்புறத்து வெண்ணிறெத்தன நம்மணி வளையார்
குழலும் அளகமுழ் பெய்யக் கொய்யாத குராமலரெ.)

**பொ-ரை:-** *தன் திருவடிகளையும் திருவருளையும் நம் சென்னியில் வைத்தருளும் ஈசனது கனகச் சிலம் பாகிய சிராமலையிலே, நம் வளையலணிந்த பெண்டிர்கள் தம் குழலிலும் அளகத்தினும் சூடிக்கொள்ளக் கொய் யப்படாது பூத்துள்ள குராமலர்கள், சூழவும் மலர்ந்த அசோகும் பலாவும் தொடர்ந்து நெருப்பின்புறத்தே பூத்த வெண்ணீறுபோல விளங்குவன எ-று.*

**கு-ரை:-** *சுழலும் - சூழவும். அசோகும் பலாசும் செந்நிறப்பூக்களுடையன. குராமலர், வெண்ணிறத்தது. அசோகு பலாசுகளை உள்ளடக்கிக் குராமலர்கள் அடர்ந்து பூத்திருப்பது நீறுபூத்த நெருப்புப்போன்றது என்றபடி. சிவபிரான் அணிவதற்கும் அவரது பூசனைக்கும் உரியதாதலின் குராமலர், மகளிர் குழலிலும் அளகத்திலும் அணிந்துகொள்ளக் கொய்யப்படாததாயிற்று. 'கண்ணுத லெந்தை...கொங்கலர் கண்ணி யாயினகுரவே' (திருவாரூர் மும்மணிக்கோவை. 16.) 'குரவ நாண்மலர் கொண்டடி யார் வழிபாடுசெய் விரவி நீறணிவர்' (தேவாரம்.) எனக் காண்க. அளகம் - நெற்றிமேன் மயிரொழுங்கு; அளகமும் குழலும் வேறுபட்டவை; 'அளகத்தின் அட்டிய தாதும்... சுரிகுழல்...மாலையும்' என்பது திருக்கோவையார் 122.*

**குராமலை கொண்ட வுலகொண் மதியமுங் கோளரவும்**
**இராமலை வான்பகை யென்பதுபொய் மெய்ம்மை**
**யோர்க்கருளும்**
**சிராமலை வானவன் சென்னியின் மேற்கொண்ட சீர்மையினற்**
**கராமலை நீர்க்கங்கை பாலுடன் வாழ்கின்ற கண்டனிரே. 99**

(குராமலைகொண்ட உலகொளி[ம்]மதியமுங் கொளரவும்இரா
மலை வான்பகை யென்பது பொய்ம்மெம்மையொர்க்கருளுஞ்
சிராமலை வானவன் சென்னியின்மெற்கொண்டசிர்மையினற்
கராமலை நிர்க்கங்கைபாலுடன் வாழ்கின்ற கண்டனரெ.)

**பொ-ரை;-** *உண்மை யடியார்க்கு அருள்புரியும் சிராமலைத் தேவன் தன் சென்னியின்மேல் வைத்துக் கொண்ட பெருமையால், முதலைகளைக்கொண்ட அலைநீர் உடைய கங்கையில் மதியமும் அராவும் கூடி ஒன்ருக வாழ்தலை நீவிர் கண்டீர்களன்ருே! அவ்விரண்டும் இரவில் தம்முள் இகலும் பகைமை உடையன என்று உலகோர் ஓதுவது பொய்யே எ-று.*

கு-ரை:- உலகு பகை என்பது பொய் என இயையும். *குராமலை கொண்ட உலகு - குராமரங்களைக் கொண்ட மலைகளைக்கொண்ட உலகம். 'கண்டனரே' என்றும் படிக்கலாம்.*

**கண்டன கேட்டன வுற்றன காம ரறுசுவையால்**
**உண்டன மோந்தன வைம்பொறி யுள்ள வுயிர்தமைப்பக்**
**கண்டன கேட்டன வுற்றன காம ரறுசுவையால்**
**உண்டன மோந்தன பொன்மலை யானையர்க் கோக்கினவே.**

(கண்டன கெட்டன வுற்றன காமர[று] சுவையா லுண்டன [மொந்தனவை]ம்பொறியுள்ளுமுயிர் தழைப்பக் கண்டன கெட்டன வுற்றன காமரறு சுவையா லுண்ட[ண்ட]ன மொந் தன பொன்மலையாளையர்க் கொக்கினவெ.)

**பொ-ரை:-** *கண்டும் கேட்டும் உற்றும் உண்டும் உயிர்த்தும் செயல்புரிந்த கருவிகளாக ஐம்பொறிகள் உள்ளன. இவை உடலனுபவத்துக்கன்றி ஆன்மா தழைத்தல் வேண்டிப் பொன்மலையாளும் ஈசனுக்காகவே அமைக்கப்பெற்றனவாம் எ-று.*

கு-ரை:- *'கண்டுகேட் டுண்டுயிர்த்துற்றறியும் ஐம்புல னும் ஒண்டொடி கண்ணே உள' என்றாராயினும் சிற்றின் பத்தின் பொருட் டன்றிப் பேரின்பம் அடைவதற்கே அவை அமையலாயின என்பது கருத்து.*

**ஒக்கிய கையோ டொருக்கிய வுள்ளத் தியோகியர்தம்**
**வாக்குயர் மந்திரம் வானரங் கற்றுமந் திக்குரைக்கும்**
**தேக்குயர் சாரற் சிராமலைக் கூத்தன்செம் பொற்கழன்மேல்**
**ஆக்கிய சிந்தை யடியர்க்கென் னேவின் றரியனவே. 101**

(ஒக்கிய கையொடொருக்கிய வுள்ளத்தி யொகியர்தம் வாக் குயர் மந்திரம் வானரங்க[ற்]று மந்திக்குரைக்குந் தெக்குயர் சாரற் சிராமலைக்கூத்தன் செம்பொற்கழல்மெ லாக்கிய சிந்தையடியர்க்கென்னெ வின்றரியனவெ.)

**பொ-ரை:-** *மேலே உயர்த்துக்கூப்பிய கையோடும் ஒருமுகப்படுத்திய உளத்தினையும் உடைய ஞான யோகி யரின் வாக்கினின்று எழும்பும் வேத மந்திரங்களை வானரங்கள் கற்றுத் தம் பெண்டிரான மந்திகட்கு*

உரைப்பதும், தேக்கு மரங்கள் உயர்ந்த சாரலுடையது மான சிராமலை யீசனது செம்பொற்கழல் அணிந்த திருவடிகளிடமே கவிந்த சிந்தையுள்ள மெய்யடியார் கட்கு அரியவானவை யாவை உள? எ-று.

**அரியன.சால வெளியகண் டீரரு வித்திரள்கள்**
**பரியன நேர்மணி சிந்துஞ் சிராமலைப் பால்வண்ணனைக்**
**கரியன செய்யன நுண்புகர்ப் பைங்கட் கடாக்களிற்றின்**
**உரியனை நாழிகை யேத்தவல் லார்க்கிவ் வுலகத்துளே. 102**

(அரியனசால வெளிய கண் டிரருவித்திரள்கள் பரியன நேர் மணிசிந்துஞ் சிராமலைப்பால்வண்ணனைக் கரியன செய்யன நுண்புகர்ப் பைங்கட் கடாக் களிற்றி னுரியனை நாழிகை யெத்தவல்லா[ர்]க்கிவ்வுலகத்துளெ.)

**பொ-ரை:-** அருவிக் கூட்டங்கள் பருமையும் நேர்மையும் உடைய அரதனங்களைச் சிந்தும் சிராமலைப் பால் வண்ணனும், கருமையும் செம்மையும் கலந்த நுண்ணிய புள்ளிகளையும் பசுங் கண்களையும் மதநீரையும் உடைய யானையின் தோலினை ஆடையாகக் கொண்ட வனுமான பெருமானை ஒரு நாழிகையேனும் துதிக்க வல்லவர்கட்கு இவ்வுலகத்தில் கிடைத்தற்கரியன யாவும் எளியனவாம்; காண்மின் எ-று.

## இறுதிப் பாயிரச் செய்யுட்கள்

**மற்பந்த மார்வன் மணியன் மகன்மதில் வேம்பையர்கோன்**
**நற்பந்த மார்தமிழ் நார யணனஞ் சிரமலைமேற்**
**கற்பந்தல் நீழலில் வைத்த கலித்துறை நூறுங்கற்பார்**
**பொற்பந்த நீழ லான்றிருப் பாதம் பொருந்துவரே.**

(மற்பந்தமார்[வ]ன் மணியன் மகன் மதிள்வெம்பயர்கொ ணற்
பந்தமார் தமிழ்நாராயணனஞ்சிரமலைமெற் கற்பந்த னிழ
லில் வைத்த க[லி]த்துறை[நூறுங்]கற்பார் பொற்பந்தனிழ
லான்றிருப்பாதம் பொருந்துவரெ.)

**பொ-ரை:-** *கட்டமைந்த மார்பினனான மணிய னுக்குப் புதல்வனும், மதில்சூழ்ந்த வேம்பைப் பதியினர்க் குத் தலைவனும், நல்ல யாப்பான மதி உடைய தமிழ் மொழி வல்லோனும் ஆகிய நாராயணன் என்பான் நம் சிராமலையின் மேலிடமாகக் கல் மண்டபத்தின் நிழலிலே பொறித்துவைத்த கலித்துறைப் பாக்கள் நூற்றினையும் கற்பவர்கள் சிவபிரானது அழகின் எல்லையாகவிளங்கும் திருவடிகளைப் பொருந்தி நித்தியராய் வாழ்வர் எ-று.*

**மாட மதுரை மணலூர் மதில்வேம்பை**
**கோடமர் சேய்ஞலூர் குண்டூரிந்—நீடிய**
**நற்பதிக்கோ னார யணனஞ் சிரமலைமேற்**
**கற்பதித்தான் சொன்ன கவி.**

(மாடமதிரை மணலூர் மதிள் வெம்பையொடமர் செஞலூர்
குண்டூர் இந்நிடிய நற்பதிக்கொ னாராயணனஞ் சிராமலை
மெற் கற்பதித்தான் சொன்ன கவி.)

**பொ-ரை:-** மாடங்களுடன் கூடிய மதுரையும், மணலூரும், மதில்சூழ்ந்த வேம்பையும், நீர்க்கரையிடமான சேய்ஞலூரும், குண்டூருமாகிய சிறந்த நற்பதிகளின் தலைவனான நாராயணன் என்பான் நம் சிராமலையில் கல்லிடம் பொறிக்கப்பாடிய கவிகள் உடையன மேற்கூறிய நூல் எ-று.

முற்றும்.

உ
சிவமயம்

# சிராமலைப்பெருமான் தோத்திரம்

சொற்கொண்ட கிளியனையா ரனங்கனுக்குத்
துணையாகத் துணைப்பு ரூர
விற்கொண்டு விளையாடுந் திரிசிரா
மலையிலுறை விமலன் றன்னைப்
பொற்கொண்ட நிறத்தானும் கரியமுகில்
நிகர்வானும் புலரா வண்ண
மற்கொண்ட மிடற்றானைச் செவ்வந்திப்
பெருமானை அகத்திற் சேர்ப்பாம்.

# தேவி தோத்திரம்

பனிகொள் வரையிற் பிறந்தபிடி
பரனா ரிடத்திற் படர்ந்தகொடி
முனிவ ரிமையோர் மகிழஅறம்
முப்பத் திரண்டும் வளர்த்தருளும்
வனிதை வடிவே லனைப்பயந்த
மடந்தை மட்டு வார்குழலாள்
இனிய பதமாம் இருபோதும்
தலைமேல் தரிப்பாம் இருபோதும்.

—சைவ எல்லப்பநாவலர்.